# இந்தியா.

மாக்ஷிமை தங்கிய ஐந்தாவது மகாஜார்ஜ்

சக்ரவர்த்தியவர்கள் வாழ்த்துப்பாக்கள்.

இஃது

திண்டிவனத்தாலூகா

மரக்காணத்தில் ஷை சக்ரவர்த்தியவர்களுடைய

கிரீடதாரணையைக் கொண்டாடத்தினத்தில்

மகா-ள-ள-ஸ்ரீ

பு-ஒ-நா-வேங்கடாசலநாயகரவர்களால்

இயற்றிய

புதுவை

வித்தியாபிவர்த்தனி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

1911

பூதாம்போல் வளரவுல காண்டவிக்டோ ரியராணிப்
புகழே நீயாய்
மாதரையில் வந்ததென்பர் சார்ஜ-சக்ர வர்த்தியரே
மதிவல் லோரே.*. (3)

படியிலறி யாதட்டைக் குருதியுண்டு வக்குமந்தப்
பான்மை போல்தன்
குடிகளுள நோகாம லிதமாக விறைகொடுசெங்
கோன டாத்தி
நெடியபுகழ் வாங்கியநல் லெட்வார்டு சக்ரவர்த்தி
நெஞ்சுக் கொத்த
முடிமனர்தாம் சார்ஜ-சக்ர வர்த்தியரே யெமையுந்தை
முறையாள் வீரே *. (4)

அரசியலுங் குடியியலு மிரண்டுதரு மத்தியலு
மகில நாதன்
அரசனென வுதரித்துப் புலனுக வாண்டுவந்த
வணியிந்த்யாமும்
முரசொலிமா ருமுன்றிற் சார்ஜ-சக்ர வர்த்தியரே
முந்நீர் வைப்பிற்
பரசுறுநின் னடிப்பிடியா வாளுகையில் வந்ததெங்கள்
பாக்கிய மாமே *. (5)

உரம்பரித்த புட்படையும் வளக்குடியும் விரோதிலனு
முணரு மைந்து
திரம்பரித்த மந்திரியுந் திண்ணரணு மான்றோர்சற்
சிநேக முந்தே
வரம்பரித்த திருவுமொருங் கேயுடைத்தாஞ் சார்ஜ-சக்ர
வர்த்தி யாரே
கரம்பரித்த சரியாளே மந்திரியாஞ் சுகம்பெறச்
கடைக்கண் பாரீர்.*. (6)

கற்புநிறைந் தோங்குமெந்தாய் மேரிசக்ர வர்த்தினியார்
காண வின்று
பற்பலநாட்டரசர்கள்கண்டௌவியமுற்றுக் கண்ணேறு
படவே பொன்றாப்
பொற்புறிந்தி யாமாதை மணந்தொருமுப் பான் கோடிப்
புதல்வர் தம்மை
யற்பொடுபெற் றாய்சார்ஜ-சக்ரவர்த்தி யேநின்போ
லார்பெற் றாரே.*. (7)

படிகளெல்லா மொருகொடியிற் கட்டியாளுஞ் சார்ஜு
பார்த்திபா நின்
குடிகளென வாய்ந்துவந்தோ மெங்குற்ற முங்குணமாக்
கொண்டாள் வாயே.*. (12)
சிற்றுருவாய் மூன்றடிமண் கேட்டவற்குத் தந்ததற்பின்
சிரசுந் தந்து
சற்றுமனந் தளராத வோரண்ண லாண்டுபுகழ்
தழைத்த விந்தியா
மற்றிதனைக் கைப்பற்றிச் சார்ஜுசக்ர வர்த்தியரே
மகிழப் பெற்றீ
ரெற்றுதிரைக் கடலுலகிற் குடியோம்பி யிரப்போருக்
கீந்தாள் வீரே *. (13)
அக்காலத் தாண்டவெய்ய கொடுங்கோன்மி லேச்சராச
ரளீயே யின்றி
யெக்காலுங் கொலைகற்பா சாரபங்கங் களவாதி
யிடுக்கண் செய்ய
விக்காலைப் பட்டதென வீடழிந்தோ மிந்த்தியாவு
மெழின்மை யற்ற
திக்காலும் மாளுகையால் சார்ஜுசக்ர வர்தநியரே
யின்புற் றோமே.*. (14)
பொய்யொன்று சொலவஞ்சி யரசுமனை மைந்தருய்போய்ப்
புலையற் காளாய்
மெய்யொன்றே துணையெனக்கொள் ளொருவேந்த னாண்டுவந்த
மேலா மிந்த்யா
வையின்று யருவிமகு டமபூண்டு வான்மண்ணு
மதிக்கப் பெற்ற
மொய்யொன்று சார்ஜுசக்ரவர்த்தியரோ வாய்மையென்று
மூளைப்பிப் பீரே.*. (15)
ஒருதனித்தாய் வருந்தியருந் தவமியற்றி கண்ணேபோ
லுவப்பு மீக்கூர்ந்
திருமகவைப் பெற்றதென விங்கிலாண்டு மிந்தியாவு
மிலங்கப் பெற்றாய்
வருமிருநாட் டுக்குடிக ணிறமன்றிக் குணங்குறியின்
மாற்ற முண்டோ
அருமையெங்கள் சார்ஜுசக்ரவர்த்தியரோ கண்ணோடா
தணைத்தாள் வீரே *. (16)

வரியுழுவை யும்பசுவு மொருதுறைமுன் னீருண்ணும
வண்ணஞ் செங்கோல்
புரியுமுறை யாண்டவிக்டோரி யாவைப்பெற் றின்றுமுடி
பூண்ட தாலே
தெரியவிளிப் பசுவினிரா டகன்றபுலிப்பால்குடித்துக
செழிக்க நீதி
பிரியமுடன் செலுத்துவையன் ரோசா சக்ரவர்த்திப்
பெருமானீயே * (17)
பொன்னகர்க்கிம் மெய்யடனே போகவெளி னும்வழியைப்
புலப்படுத்தி
ன்னலின்றி யருளுடக மும்மதியு நீங்கியுமே
சிறக்க முமவெ
தன்னவர்கண் டஞ்சாண்மை யும்பெற்றிந் தியாவிற்குத்
துரைநீ ராக
என்னதவஞ் செய்தோமோ சார்ஜ்சக்ர வர்த்தியரே
யென்றும் வாழ்வீர் * (18)
மாழைமணி யாதிபல பொருளுயிர்கட் காகடவுள்
வருந்த வைத்த
பேழையெனு மிந்தியாவி லாங்கிலமா மன்னர்கொடிப்
பிறங்க வென்றும்
வாழையடி வாழையென சார்ஜ்சக்ர வர்த்தியார்நீர்
வருநீர் நல்ல
ஊழையுமொர் தள்ளமொரியா முற்பகற்செய புண்ணியத்தா
லுமைப்பெற் றோமே *. (19)
அழுதபிள்ளை தேயனையாள் பரிந்தினிது பாலளிப்பா
ள துபோல் வேந்தா
தாழுதிரந்த குடிகளுக்கே யருள்வமொன்ப ரிந்தியாவிற்
றரையே யாங்கள்
முழுதுணருங் கல்வியிலா மூக்கொடிந்த புள்ளாமே
மொழியோர் நாளும்
பழுதுபடாச் சார்ஜ்சக்ர வர்த்தியரே நல்லவருள்
பண்ணு வீரே (20)
மிஞ்சத்த முடைத்தானோர் மண்ணெய்கரி யயம்விளையு
மேனாட் டார்கள்
நெஞ்சத்தில் வருவதுண்டாங் கீழ்நாட்டா ரடிக்கடியு
நெடுநாளாய்

பஞ்சத்திற் படலென்கொ லழிந்திலநீ பட்டம்பூண்
பயனே யாக
கொஞ்சத்திற் கொஞ்சமெனுஞ் சார்ஜ-சக்ர வர்த்தியரே
குறிக்கொள் வீரே.* (21)
மூந்திய சாண்டநின்ற னரும்பாட்டித் தந்தையீவர்
மோக்ஷப் பூமி
யிந்தியவென் றிதனிடத்தன் பகலாம லெவ்வளவோ
விட்ட மாத்தஞ்
சிந்தைவைத்துக கோளுரைக்குச் செவிகொடா தெங்குறைக
டீர்த்துள்ளார்கள்
அந்தவழி சார்ஜ-சகா வர்த்தியரே யாண்டுகுறை
யகற்று வீரே * (22)
விழிக்கெளிய ஞய்ச்செவிகருள் ளேசென்று மிகவுள்ளம்
வேகச் செய்யு
மொழிக்கும்வெகு ளாதவனு யுறும்வேதனு ளுலகம்
விளங்கி மேலாச்
செழிக்குமெனு மறநூல்க ளாகுறைக ணிற்கெடுததுச
செப்பு வோமேற்
பழிக்குளவாக குவகாலஞ் சாரஜ-சகா வர்த்தியரே
பார்ததாள வீரே * (23)
படித்தவரும் பணத்தவரும் பார்த்திபருத யோகரும்பல்
பகுப்புச்சாதி
குடித்தனத்தின் முறையொழுகுங குடிகளு மித்திருநாளிற்
கூடியே நின்
வடித்தபுக ழெடுத்துரைத்து வாயினித்தோ மிந்தியாவில்
வந்தேசெஙகோற்
பிடித்தரசு செயசாரஜ- சக்ரவர்த்தி யரே வாழ்வீர்
பெரிது மாதோ.* (24)
செல்வமிகும் பிரிட்டீஷ்மா சார்ஜ-சரக்வர்த்தியவர்
செங்கோல் வாழ்க
சொல்வலியார் பார்லிமெண்டு வாழ்கமந்த்ரி மார்வாழ்க
துகளில் லாத
பல்வுளங்க ளோங்குமிந்தி யாவரசர் வாழ்கமற்றும்
பாரோ ரெல்லாந்
தொல்வினையற் றேவாழ்க மாக்காணப் பதிவாழ்க
துலங்கி மாதோ.*. (25)

# "கம்பநாடர்"



செந்தமிழ்க்

## கம்ப ராமாயண ஆராய்ச்சிப் பிரசுரம்.

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசர ணங்களே.—கம்பர்.

| பொய்கை. | ~~முதல்~~ 16-வது வலஞ்சிகை | மலர். |
|---|---|---|
| 11 | | 4 |

## உள்ளுறை.

கம்பரும் வான்மீகரும்
கம்பராமாயண ஆராய்ச்சி
கம்பர்—கவியும் உரையும்
கம்பராமாயண வசனம்




ஆசிரியர்—மோ. வே. கோவிந்தராஜையங்கார்.
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்.

Title page printed at K. A. Ltd., Cbe., 94-36.

இங்ஙனம் வான்மீகி பகவான் விஸ்தாரமாகப் பேசியுள்ள நீதி போதங்களை நம் கம்பநாட செல்லியிருக்கின்றார். அவை பின்னே வரும் அதற்கு முன்னர், நாடகம் நடத்துவதுபோல், "விசுவாமித்திரர் முதலிய மூவருக்கும் எதிரே தாடகை எங்ஙனம் வந்து குதிக்கின்றாள்?" என்பதை நமது கவிப்பெருமான் நடத்திச் சென்றிருக்கும் பாசுரங்களைக் கூறிக் கொண்டு செல்வோமாக. முதலாவதாக, 'விசுவாமித்திரர் சொன்னதைக்கேட்ட இராமன் மறுமொழி கூறியது" வருகின்றது:—

## தாடகை வரவு

### கம்பநாட்டாழ்வார்

"அங்கிளையவன் அப்பாசு ரைப்பயந்து மேனாக
கொங்குறைநறை நைச் செம லர்க்குழு லர்க்கோ
எங்குறைவ திகவ்தொழிலி யாருடையவள் என்றான்
சங்குறைக ரத்தொருத னிச்சிலை தரித்தான்".

**இதன் பொருள்:—** அந்த இடத்தில் ஆசாரியராகிய விசுவாமித்திரமுனிவர் அத்தன்மையாகச் சொல்ல, அதைக்கேட்டு, சங்கு பிடிக்கும் கையில் வில்லை ஏந்தி நின்ற இராமன், மணமுறைகின்ற மலர்களணிந்துள்ள கேசங்களுடைய தலையை அசைத்து, "இத்தொழிலைச் செய்பவள் எங்கே இருக்கின்றாள்?" என்று கேட்டார்.

"கைவரையனைத் தகைய காளையுரை மேனாள்
ஐவரைய கத்திடைய டைத்தமுனி ஐய
இவ்வரையிருப்பவள் என்பதனின் முன்பே
மைவரைநெருப்பெரிய வந்ததென வந்தாள்."

**பொருள்:—** யானையை போன்ற காளையுருவினனாகிய ஸ்ரீ ராமபிரானது வார்த்தையைக் கேட்டு, பஞ்சேந்திரியங்களையும் அடக்கிக் காத்தவராகிய விசுவாமித்திர முனிவர், 'ஐய! இராமா!! அவள் இதோ இந்த மலையில்தான் வஸிப்பது" என்று சொல்லுதற்கு முன்பு, ஓர் கரிய பெரிய மலையானது நெருப்பெரிந்து கொண்டு வந்ததுபோல எதிரில் தாடகை வந்து சேர்ந்தாள்.

இவ்விரண்டு செய்யுட்களாலும் "ஸ்ரீராமன் வினாதலும் முனிவர் மறுமொழி உரைத்தலும்" விளங்கின. முன் செய்யுளில் ஸ்ரீராமனது பரத்வம் விளங்க "சங்குறை கரத்து ஒரு தனிச்சிலை தரித்தான்" என்று "சங்கு இருந்த கையில் அச சங்கை மறைத்துவிட்டு ஒப்பற்ற வில்லைத்தரித்துக் கொண்டு வந்தான்" எனக் கூறியிருத்தல் காண்க. அடுத்த செய்யுளில், க்ஷத்திரியாம்சம் பெற்ற ஸ்ரீராமன் இளம்பிராயம் முதலே "அச்சம் என்பதை எச்சமயத்திலும் உணர்ந்தவரல்லர்" என்பது தோன்றற்குக் 'காளை' என்னும் சொல்லை யிட்டிருக்கின்றனர்; "காளை" காளைக்கன்று; என்னை:— (காளை) "இளங்கன்று பய மறியாது" என்பது பழமொழியன்றோ? கைவரை — கை + வரை: கையையுடைய மலை; அதாவது மலைபோலும் உருவு கொண்டு கையையுடைய ஜந்து என்பது பொருள்; யானை யென்று ஆம்; கைவரை - யானை; இதனால் யானை போன்ற இராமன் என்பது பொருளாகப் பெற்றும். இச்செய்யுளின் மூன்றாவது அடியிலும், நான்காவது அடியிலும் உள்ள "இவ்வரை யிருப்பதவள் எனபதனின் முன்பு ஓர் மைவரை நெருப்பெரிய வந்தெனென வந்தாள்" என்று, "இந்த மலையில்தான் அவள் இருப்பது என்று விசுவாமித்திர முனிவர் சொல்லற்கு முன்பே, அத்தாடகையானவள், ஒரு கரிய மலையானது நெருப்பெரிந்து கொண்டு எதிரோடி வந்ததைப் போலத்தனது செம்பரா கம் படர்ந்த சிவந்த கூந்தலுடனும் கருத்துப் பெருத்த சரீரத்துடனும் எதிரே ஓடிவந்தாள்' எனக் குறித்துள்ளார்; இஃதுஒரு நாடக நிகழ்ச்சியை அத்யத்புதமாகக் காட்டி நிற்கின்றதன்றோ? அன்றியும் "இந்தத்துஷ்ட அரக்கியை, முனிவர், (வயதுடைப் பெரியோர், பலம்பொருந்தி யரக்கரைப் பொருது அழித்த பழக்கமுடைய க்ஷத்திரியத் தொழிலோர்) தாம் கொல்ல முன் வாராமல், இளம்பிராயமுடைய - சுகுமாரமான மேனியுடைய ஸ்ரீராமபிரானைத்தூண்டினது ஏனோ?' என வினவுவார்க்கு, இச்செய்யுளின் இரண்டாவது அடியில் 'ஐவரை அகத்திடை அடைத்த முனி" என்று, "பஞ்சேந்திரியங்களையும்

வென்றடக்கிய முனிவரர்" எனக் குறித்துத் தக்க விடை பகர்ந்திருத்தலை யுணர்க. "க்ஷமா ரூபம் தபஸ்விநாம்" "பொறுமையே தாபஸிகட்குப் பூஷணம்" ஆனமைபற்றியும், இப்போது இவளைக் கொல்லுதற்காகத் தமது ஸாத்விக வுணர்ச்சியைக் கலைத்துத் தாமஸராஜஸ வுணர்ச்சியைப் பெற்றுக்கொண்டால், இதுவரையில் அந்த யாககாரியத்துக்காகத் தாம் புரிந்து முயன்று சம்பாதித்துச் சேர்த்து வைத்திருக்கும் தவசித்தி அழிந்துபோய், மறுபடியும் வெகு பிரயத்தனம் செய்து அதனைச் சம்பாதித்தல் வேண்டுமே என்பதுபற்றியும், ஸ்ரீராமபிரான் தக்க வீரன் ஆனமைபற்றியும், அவர் அவதார புருஷரானமைபற்றியும் அங்ஙனம் தாம் அழிக்க முயலாமல் ஸ்ரீராமபிரானை யேவினர் என்பது தோன்றக் கூறினர் என்பது போதருகின்றது.

**வான்மீகி பகவான்.**

"முன் பூமியை யெல்லாம் அழிவடையச் செய்ய வேண்டும் என்றெண்ணங்கொண்ட விரோசனன் பெண்ணாகிய மந்தரை யென்பவளை இந்திரன் அழித்தானென்பது யாவருங் கேட்டிருப்பதொன்றன்றோ? ராமனே! இன்னொன்றும் சொல்லுகிறேன் கேள், சுக்கிரனுக்குத் தாயாகியும் பிருகு மஹரிஷியின் பத்நியுமாகிய ஒரு பெண்பிள்ளை, முன்பு, உலகத்திலிந்திரனே யில்லாமலே செய்திட வேண்டுமென்னும் நினைப்புக்கொண்டு, யாதொரு தடையுமின்றிக் கடுமையான விரதஞ் செய்யத் தொடங்கினளென்றும் அவளை விஷ்ணுமூர்த்தி வதைத்தாரென்றும் உலகம் பிரசித்தமாகச் சொல்கின்றதன்றோ? இவர்களையன்றி மற்றும் பல மகாத்மாக்களாகிய ஸத்புருஷர்களும் அதர்மத்தில் மனம் செலுத்திய பெண்களை முடித்திருக்கின்றனர்."

**கம்பநாட்டாழ்வார்.**

மேற்சொல்லியிருக்கும் வான்மீகியின் அபிப்பிராயத்தையே தான் கம்பநாட்டாழ்வாரும் கூறி, உதாரணங்கள் காட்டியிருக்கின்றார் என்றாலும், அந்த உதாரணச் செய்யுட்கட்கு முன்னம், கஉ - செய்யுட்களைக் கூறி, அவற்றுள் ச - செய்யுட்களால் தாடகையென்று பெயருடைய அந்த அரக்கியினது தேக வர்ணனையைக் குறித்துப் பின்,

"கடக்கரும் வலத்தெனது காவலிது யாவும்
கெடக்கருவ றுத்தனனி னிச்சுவையி டக்கும்
விடக்கிரிதெ னக்கருதி யோவிதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்தபரி சென்றா."

என்னும் ஒரு செய்யுளால் அவ்வரக்கியினது அட்டஹாஸத்தைக்கூறிப் பின்,

"மேகமழை பற்றுபுபி றிந்தனள்வி ழுங்கா
மாகவரை யற்றுகவு கைத்தனண்ம தித்திண்
பாகமெனு முற்றெயிற தக்கயயில் பற்றா
ஆகமுறு வய்த்தெறிய னென்றொதிர புன்றாள்."

என்னும் செய்யுளால், தாடகையின் மெய்ப்பாட்டையும் காண்பித்துப் பின்னர்.

"அண்ணல்முனி வர்க்கதக ருத்தெனினு மாவி
உண்ணெனவ டிக்கணைதொ டுக்கிலனு யிர்க்கே
துண்ணெனும்வி னைத்தொழிலொ டுங்கியுள னேனும்
பெண்ணெனம னத்திடைபெ ருந்தகைநி னைந்தான்."

என்னும் செய்யுளால், 'இத்தாடகைக்கொலையில் பெருமை பொருந்திய விசுவாமித்திர முனிவற்குக்கருத்துள தாமெனினும், "அவள் ஆவியை யுண்டுவா" என்று உச்சாடனம் செய்து, ஒரு கூரிய பாணத்தை யவனுயிர் குறித்து இராமன் தொடுக்கவில்லை யென்றும், ஏனெனில், அத்தாடகை எத்துணைதான் நடுங்கச் செய்யும் தீயவினைகள் புரிந்தவளாயினும் ஒரு பெண்ணுருவினள் தானே; பெண்ணைக் கொல்லுதல் தகாதன்றோ? என்று பெருந்தகையிராமபிரான் நினைத்திருந்தார்" என்றும் கூறுகிறார்.

பின்னர் ச - செய்யுட்களால், விசுவாமித்திரர் ஸ்ரீராமனைப் பார்த்துத் தாடகையின் வல்லமைகளையும் அவளது கொடிய செயல்களையும் அவளைக்கண்டு ஆண்களில் பலமுடையோரும் நாணமுறும் செயலையும் ஆண்மை யென்னும் தன்மை அவளிடமே குடிகொண்டுள்ள தென்பதையும் இந்திரன் முதலிய

தேவர் யாவரும் இவ்வரக்கியைக்கண்டு நடுங்கியோடினார்கள் என்னும் நிகழ்ச்சிகளையும் கூறிய பின்னரே உதாரணங்களாக முன்னம் நடந்துள்ள பிரசித்தமான பெண்கொலை யிரண்டையும் கூறுகின்றார் முனிவர் என்று கம்பர் குறிக்கின்றார். இச்செய்யுட்களையும் அவற்றுக்கு முன்னும் பின்னும் அவசியம் வேண்டற்பாலனவான இரண்டு செய்யுட்களையும் கீழே காட்டி அவற்றின் பொருள்களையும் ஒருவாறு குறிப்போமாக.

“மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக் கின்றதி யாதெனின்
முன்னோர் காலநி கழ்ந்தமு றைமைய
தென்ன வோத லுற்றனன் தவத் திறலான்”.

**பொருள் :**—“சக்கரவர்த்தி திருமகனே! மறுபடியும் இன்னமொன்று யான் சொல்வதைக் கேட்பாயாக; அது யாதெனில், முன்னோர் காலத்தில் நிகழ்ந்துள்ள கிரமமேயாகுமது” என்று தவத்திறலுள்ள முனிவர் சொல்ல ஆரம்பித்தார்.

“பிருகு வென்னும்பெ ருந்தவன் றன்மனை
வருக யற்கட்டி யாதியவ் வசுரர்க்
குருகு காதலு றவுற வாதலால்
கருதி யாழிக ரந்தனன் நேமியான்.”

**பொருள் :**—பிருகு என்னும் ஓர் அருந்தவத்தினருடைய மனைவி; மீன் போன்ற கண்களையுடைய கியாதி யென்னு பெயருடையவள்; இவள் அசுரர்தம் பொருட்டு உருகும் அன்புடையவளாக இருந்தமை கண்டு அவர்கட்கு அவள் உறவாயிருத்தலைக் கண்டு, சக்கரக்கையனாகிய விஷ்ணுமூர்த்தி அவள் ஆவியைக் கவர்ந்து விட்டனர்.

**இதன் மற்றொரு விவரம் :**—தேவாசுர யுத்தத்திலே தன்பால் அடைக்கலம் புகுந்த அசுரரை மறைத்து வைத்திருந்த கியாதி யென்பவளைத் திருமால் கொன்றார் என்பது புராணக்கதை.

“ வான கத்தினின் மண்ணினின் மன்னுயிர்
போன கந்தனக் கென்றெண்ணும் புந்தியள்
மானம் வெஃகும திப்பெய ராடலை
ஊனெ ழித்தனன் வச்சிரத் தும்பர்கோன்.”

**பொருள்** :—விண்ணிலும் மண்ணிலும் வாழும் பெருமை பொருந்திய ஜீவர்களெல்லாம் தனக்கு உணவுப் பொருள்கள் தாம் என்றெண்ணும் புத்தியுடையவளாகிய மானம் வெஃகிய மதி யென்னும் பெயருடையவளை, இந்திரன் வச்சிராயுதத்தால் அழித்து விட்டான்.

**இதன் மற்றொரு விவரம்** :—பூமியை அழிக்க விரும்பினவ ளாகிய விரோசனன் மகள் மந்தரை யென்பாளை இந்திரன் கொன் றனன் என்று வான்மீகம் கூறும்.

“ஆத லாலரிக் காகண்ட லன்றனக்
கோது கீர்த்தியுண் டாயதல் லாதிடை
ஏத மென்பன எய்திய வோசொலாய்
தாத டார்ந்துத யங்கிய தாரினாய்.”

**பொருள்** :—மகரந்தப் பொடிகள் அடங்கிய மலர் மாலையுடைய ராமா! மேற்கூறிய உதாரணங்களிப்படி யிருந்தனவாதலாலே சக்கரக்கையனாகிய விஷ்ணுவுக்கேனும், இந்திரனுக்கேனும் அப் பெண் கொலையால் குற்றம் வந்து சேர்ந்தனவோ ? சொல்வாய் ? இல்லை யல்லவா ?

இதனால், கம்பரும், உதாரணங்களாக வான்மீகி கூறியபடியே அவ்விரண்டு கதைகளையும் குறித்துள்ளார் என்பது தெளிவா கின்றது.

## தாடகை வதம்.

**கம்பநாட்டாழ்வார்.**

பின்னரும் கம்பர், விசுவாமித்திரர் கூறியதாகக் கீழ்வரும் செய்யுட்களிற் காணப்படும் பொருள்களையும் தருகிறார். முன்

மூன்று செய்யுட்களால் முன்னைய அரசர்களுடைய பெருமை யையும் செய்கையையும் தாடகையின் இரக்கமற்ற தன்மையை யும் அத்தகைய இவளைப் பெண்ணென்று நினைப்பது எளிமை யின் பாலதேயாமென்பதையும் குறிக்கிறார். அவை பின் வரும் :—

" கறங்கி டத்திகி ரிப்படி காத்தவர்
பிறங்க டைப்பெரி யோய்பெரி யாரொரங்ம்
மறங்கொ டித்தரை மன்னுயிர் மாய்த்தருந்
றறங்கெ டுத்தவட் காண்மையும் வேண்டுமோ."

" சாற்றும் நாளற்ற தென்றுத ருமம்பார்த்
தேற்றும் விண்ணென்ப தன்றியி வளைப்போல்
நாற்றங் கேட்டலுந் தின்னந யப்பதோர்
கூற்றுண் டோசொலாய் கூற்றுறழ் வேலினாய்."

"மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையிற் றீமையெ தோவைய
பின்னும் தாழ்குழற் பேதமைப் பெண்ணியள்
என்னுந் தன்மை யெளிமையின் பாலதே."

ஆகையால்,

" ஈறில் நல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்
ஆறி நின்றத றனன்ற ரக்கியைக்
கோறி யென்றெதி ரந்தணன் கூறினான்."

**இதன் பொருள்** :—ஆகையால், முடிவில்லாத உங்கள் க்ஷத்திரிய தர்மத்தைக்கருதி இதனை நான் சொன்னேனல்லாது, இவளைக் கோபித்து, தர்மமல்லாததை நான் சொல்லிவிடவில்லை; ஒரு க்ஷத்திரியனாகிய நீ, உலகைப் புடைத்தழித்து விழுங்கிக் கொண்டிருக்கும் ஒரு அரக்கியைக்கண்டும் ஆறி நிற்பது உங்கள் க்ஷத்திரிய தர்மத்துக்குச் சிறிதும் அடாது; ஆனதால், இவ்வரக் கியை நீ கொல்வாய் என்று அந்தணராகிய விசுவாமித்திரர் கூறினார்.

இவ்வரிய தர்மவுரைகளைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீராமபிரான் கூறியுள்ள மறுமொழிகளை யிரு பெரும் புலவர் பெருமக்களும் எங்ஙனம் குறித்து செல்கின்றனரென்பதையும் ஆராயப் புகுவோமாக; அவை பின் வருகின்றன: —

**வான்மீகி பகவான்.**

"இப்படி விசுவாமித்திரர் பெரும் பொருளுடையதாகி, தைரியத்துடன் உரைத்த அம்மொழியைக் கேட்டு, தசரத மகாராஜனது குமாரனாகிய ஸ்ரீராமன், பெரியோர் சொற்படி நடத்த வேண்டுகையாகிற விரதானுஷ்டானத்தில் நிலைநின்று மன உறுதி கொண்டு நிற்குந் தன்மையனாகையாலேயும், விசுவாமித்திர மாமுனிவன் சொற்படி நடவாயென்று தந்தையளித்த ஆணையைத் தலையேற்று வந்தவராகையாலேயும், " இவ்வாவணையில் எனக்குண்டான கௌரவத்தினாலும் மகிமை பொருந்திய விசுவாமித்திர முனிவர் மொழிவதினாலும், யாதொரு சந்தேகமுமின்றி இதை நான் செய்யவேண்டியதே " என்று தமக்குள் ஆலோசித்துத் தீர்மானித்துக் கொண்டவராகி, முனிவரைப் பார்த்து, " முனிகுல திலகரே ! அயோத்திமாநகரில் குருக்களின் நடுவில் மகாத்மாவாகியும் எனக்குத்தந்தையாகியுமுள்ள தசரத மன்னன் விசுவாமித்திர முனிவர் சொற்படி நீ நடக்க வேண்டியதென்று எனக்குக் கட்டளை யிட்டனர்; எனக்கு அம்மொழி அணுமாத்திரமும் தடுக்கப் போகாததல்லவா? அங்ஙனம் தகப்பனாரது வார்த்தையைக்கேட்டு ஒப்புக்கொண்டு வந்திருக்கிற யான், வேதங்களை யோதி மிகவும் அறிவிற் சிறந்த உமது கட்டளைப்படி யாவர்க்கும் நன்மையையே விளைக்கக் கூடியதாகிய இத்தாடகா வதத்தைச் செய்கின்றேன் ; இதற்குச் சந்தேகமில்லை ; இதுவேயன்றி, யின்னும், பசுக்கட்கும் பிராம்மணர்கட்கும் நன்மை யுண்டாகும் பொருட்டும், இத்தேசத்தினது சுகத்தின் பொருட்டும், அளவிட முடியாத மகிமையுடைய உமது சொற்படிக்குச் செய்ய ஸித்தனாக இருக்கின்றனன் " என்று சொன்னார்."

**கம்பநாட்டாழ்வார்.**

இப்பொருள்களை யெல்லாம் அடக்கிக் கம்பர், பின் வரும் ஒரு செய்யுளைக் கூறுகின்றார்.

"ஐய னங்கது கேட்டன னல்லவை
எய்தி னும்மிது செய்கவென் றேவினால்
மெய்ய நின்னுரை வேதமெனக் கொடு
செய்கை யன்றோ அறஞ்செயு மாறென்றான்."

பொருள் :—ஸ்ரீராமபிரான், விசுவாமித்திரர் சொல்லிய அதனைக் கேட்டு, "சத்தியசீலரே! தர்மம் அல்லாதன எய்தினும், இது செய்யென்று நீங்கள் ஏவிவிட்டால், தங்கள் உரையை வேதச் சொல்லாகக் கொண்டு செய்தலன்றோ அறஞ் செய்தலாகும்" (ஆதலின் உமது இஷ்டப்படியே இதோ இவளைக் கொல்கின்றேன் என்றனர்.)

இங்குக் கம்பர் இப்பொருளை மிக விஸ்தாரமாகக் கொண்டு போகாமல் மிகச் சுருக்கமாகக் கூறிப் போயிருக்கிறார் என்பது

## வான்மீகி பகவான்.

"சத்துருக்களைத் தபிக்கச் செய்ய வல்லவனாகிய ஸ்ரீராமசந்திரன், இவ்வாறு மொழிந்து வில்லின் நடுவை உறுதியாகப் பிடித்துத் திசைகளிலெங்கும் டங்கோஷமுண்டாகும்படி நாணையேறிட்டு வலிவுடன் டங்காரஞ் செய்தனர். அந்நாதவொலியைக் கேட்டுத் தாடகா வனத்தில் வசிப்பவரெல்லாரும் பயந்து நடுங்கினர். அதனைக் கேட்டுத் தாடகையும் இயற்கையாகவே கடுஞ்சினமுடையவளாகையால், மேலும் அளவற்ற கோபங்கொண்டு ஒன்றுஞ் செய்யத் தோற்றாமல் கட்டித்தடுமாற்றமடைந்து அந்த ஒலியைத்தானே ஊக்கத்துடன் ஆலோசித்துப் பின்னும் கோபம் மேலிட்டு மூர்ச்சையடைந்து அவ்வொலி எந்தத் திசையினின்றும் உண்டாகின்றதென்று நிதானித்துக்கேட்டு அந்தத்திசையை நோக்கி வேகமுடன் எதிர்த்தோடினள்."

## கம்பநாட்டாழ்வார்.

இந்த இடத்தில், இதனைக் கம்பர் குறித்துப் போகும் முறை பின்வருமாறும்.

“ கங்கைத் தீம்புனல் நாடன்க ருத்தையும்
மங்கைத் தீயனை யாளும னக்கொளாச்
செங்கைச் சூலமெனுந் தீயினைத் தீயதன்
வெங்கட் டீயொடு மேற்செல வீசினாள்.”

**பொருள்** :—கங்கையின் மதுரமான நீரினாற் சூழப்பெற்ற அயோத்திக்கு அதிபனாகிய ஸ்ரீராமபிரானது உள்ளக்கருத்தைத் தீயைப்போன்ற தாடகையென்னும் பெண்ணானவள் அறிந்துகொண்டு, தன் செங்கையிற் பிடித்திருந்த சூலாயுதம் என்னும் தீயினைத் தீயைப்போன்ற தனது கொடிய கண்ணின் தீயோடு ஏவி, இராமன்மேற் செல்லும்படியாக வீசினாள்.

இருபுலவரும் இக்கதையைத் தொடர்ந்து தாடகை வதம் வரையிலுள்ள பாகத்தை யெங்ஙனம் நடத்திச் செல்கின்றாரென்பதை யுற்றுக் கவனிப்போமாக.

**வான்மீகிபகவான்.**

“ அங்ஙனம், மிக்க விகார உருவங்கொண்ட அத்தாடகை எதிர்த்தோடி வருதலைக்கண்ட, ஸ்ரீராமபிரான் இலக்குவனைப் பார்த்து, தம்பீ! பார்வையிலேயே பயத்தை விளைவிக்குந் தன்மையளாகிய இவளது வடிவத்தைப்பார். இவள் யாவராலும் வெல்ல முடியாதவள். மாயா பலமுள்ளவள். பெண்ணெனுந் தன்மை நோக்கி, இவளைக் காதையும் நுனிமூக்கையும் அறுத்திடுமளவுடன் துரத்தி விடுகின்றேன். இவ்வளவுடன் குருக்களின் வசனமும் நடத்தப்பட்டதாகும்; ஒரு பெண்ணினைக் கொன்றழித்திட என்மனந் துணியவில்லை. ஆகையால், கைகளையும் கால்களையும் முறித்து வலிமையையும் ஸஞ்சார பலத்தையும் ஒழித்துவிடலாமென்பதையே என்மனந் துணிந்திருக்கின்றது. என்னுமிவ்வார்த்தையை யுணர்ந்துகொண்ட தாடகையானவள், இலக்குவனை விடுத்து ஸ்ரீராமபிரான்பேரில் எதிர்த்தோடி வந்தனள். கண்டிருந்த முனிவரர், ஸ்ரீராமபிரானது அமானுஷ சக்தியை யறிந்தவராயினும், மனக்கலக்கமுற்று, அவளைப் பார்த்து “ ஹூம் ” என்னும் தொனியால் அதட்டிவிட்டு, “ ஸ்ரீராமலக்ஷ்மணருக்கு க்ஷேமமும் ஜயமும் உண்டாகவேண்டு ” மென்று ஆசி மொழிந்திருந்தனர். அத்தாடகையும் கைகளால் புழுதியை வாரிக் கோரம்படும்படியாக

எந்த மெறிந்துநின்று, ஸ்ரீராமலக்ஷ்மணர்களது மனமயங்கும்படி யாகச்செய்து அவ்விருவர் மீதும் கற்களை மாரியாகப் பொழிந்தனள். ஸ்ரீராமனும் மிகச் சினங்கொண்டு, அவளெறியுங் கற்களை யெல்லாம் அஸ்திரங்கொண்டு பொடிப்பொடியாக வீழ்த்திப் பின்னும், அவளது கைகளையும் அறுத்துத் தள்ளிவிட்டார். அவள் கோபமேலீட்டால் கர்ஜனை செய்து கொண்டிருக்கையில் இலக்குவன் சரங்கொண்டு அவளது காதுகளையும் மூக்கு நுனியையும் அறுத்துத் தள்ளினன். அவளும் தனது மாயாசக்தியினால் பலவித மாயவுருவங்கள் கொண்டு போர் புரிந்து நின்றனள். அப்போது முனிவர் ஸ்ரீராமனைப் பார்த்து, "ராமா! இவள் மீது இதுவரையில் தயை செய்திருந்தது போதும்; பெண்ணென்றே நீ இவளை நினைக்கிறாய்? பெண்ணாயினும் கொடுங்கொழில் புரிபவள் அல்லளோ? மேலும் யாகங்களை யழித்துக்கொண்டிருப்பவள்; இனியும் இவளிடம் தயை காட்டி நின்றால், ஸந்தியா காலம் வரவரப் பலம் அதிகரித்து தீங்காக் கொடுமைகள் பல புரிவாள்; அரக்கர் இயற்கையிதுவாகும்" என மொழிந்தனர். ஸ்ரீராமனும், குருமொழியை மறுக்க வியலாமல், அரக்கி தமது கண்கட்குத் தோன்றாமல் ஒளிந்து நின்றே போர் புரிந்துகொண்டிருந்தாளாயினும், அவள் எறியும் கற்கள் வந்து வீழும் திசையினால் அவள் நிலையை யறிந்து, தமது வல்லமை கொண்டு பாண வர்ஷங்களினால், அவளை யெப்புறமும் அசையவொட்டாமல் தடுத்துவிட்டனராதலால், அவள் வேறு வழியற்று, இருவர்கட்கும் எதிரே ஓடிவந்து நின்றனள். ஸ்ரீராமபிரான், ஆசாரியருடைய அநுமதியினால், அத்தாடகையின் வலி பொருந்திய மார்பினிற்புகுந்து உருவியோடும்படியாக ஒர் பாணத்தை வில்லில் தொடுத்து விட்டனர். அவ்வளவிலே அவள் கீழே வீழ்ந்து மாண்டனள்."

இந்த விஸ்தார பிரஸ்தாபத்தை மறுபடியும் விரித்துரை பேசாமல், நமது கல்வியிற் பெரியார், பின்வரும் மூன்று செய்யுட்களால் மட்டும் ஒருவாறு தெரிவித்த பின்னர், ஒரு அற்புதமான செய்யுளால், தாடகைக் கொலையின் பெருமையை நன்கு கூறியிருக்கின்றார். முன்னர், அம்மூன்று செய்யுட்களைக் குறித்திட்டுப் பின்னர், அவ்வொரு அற்புதச் செய்யுளைப்பற்றியும் விஸ்தரிப்போமாக.

## கம்பநாட்டாழ்வார்.

"புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொள் மூவிலைக் காலவெந் தீமுனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வரும் கோளென வந்ததே"

"மாலு மக்கணம் வாளியைத் தொட்டதுங்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
காலனைப்பறித் தக்கடி யாள்விட்ட
சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்."

"அல்லின் மாரிய னையநி றத்தவள்
சொல்லின் மாத்திரை யிற்கடல் தூர்ப்பதோர்
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன்வி லக்கினன்."

பொருள் :—"புதிய எமன் போன்ற தாடகை கோபித்து எவிய, கிரணம் மிகுந்த மூன்று இதழ்களையுடையதாகிய சூலாயுதம் என்னும் காலவெந்தீயானது, விசுவாமித்திர முனிவரது ஆணையை மேற்கொண்டு நிற்கும் ஸ்ரீராமபிரான் பேரில், பூரணசந்திரன் மேல்வரும் ராகுவைப்போல் வந்தது."

"அதனைப் பார்த்து ஸ்ரீராமபிரானும் அதனையழிப்பதற்கானதொரு பாணத்தை யெடுத்துத் தொடுத்ததையும் அழகிய வில்லின் இருபுறங்களையும் வளைத்ததையும் யாவருமே கண்டிலர்; ஆனால், எமனிடமிருந்து பறித்தெறிந்ததுபோன்றதான - அந்தக் கொடியவளால் எறியப்பெற்ற அச்சூலமற்றுப்போய் அதனுடைய துண்டங்கள் கீழே விழக் கண்டனர்."

"அப்போது, இரவில் ஸஞ்சரிக்கும் மேகம் போன்றவளாகிய கருநிறமுடைய அத்தாடகை, ஒரு சொல் சொல்லும் கால அளவையில், கடலையும் தூர்க்கக்கூடியதாகிய கல்மழையைத் தனது கைகளால் வாரிப் பொழிந்தனள்; அம்மழையை வீராகிய ஸ்ரீராமபிரான் தமது வில்லினின்று பொழியப்பெற்ற பாணமழையால் விலக்கிவிட்டனர்."

இனி, தாடகைக் கொலையைக் குறிக்கும் அந்த அற்புதச் செய்யுளொன்றையும் ஈண்டுக் குறித்திடுவாம்.

" சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே."

இதன் பொருள்:— " முனிவரது சாபச் சொற்களைப் போன்ற மிக்க வேகத்துடன் கூடிய சுடுசரமொன்றைக் கரிய செம்மலாகிய ஸ்ரீராமன், இருளைப்போன்ற நிறமுடைய அத் தாடகையின்மேல் விட்டுவிடவே, அது அவ்வரக்கியினது வைரம் பொருந்திய மலைக்கல்போன்ற மார்பிற் பாய்ந்து அங்கேயே தங்கிவிடாமல், மிகுவேகங்கொண்டு ஊடுருவிச் சென்று முதுகின் வழியாகக் கழன்று, படியாதவர்க்குப் படித்தவர் சொல்லும் நீதி தர்மவுரைகளைப்போல் வெகுவிரைவில் ஓடிப்போயிற்று."

இச்செய்யுள், நமது கவிப்பெருமானது அற்புதச் செய்யுள் களுள் ஒன்று; இந்தச்செய்யுளால் தாடகாவதமேயன்றி ஸ்ரீராம பாணமகிமையும் புலப்படுத்தப் பெற்றிருக்கின்றது. இச் செய்யு ளின் விரிவுரை " ஆராய்ச்சிப் பிரிவில் " காட்டப் பெறும். இதி லுள்ள உவமைகள் நன்கு கவனிக்கற்பாலன. "சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்" " கரிய செம்மல் " " அல்லொக்கும் நிறத்தினள் " " வயிரக் குன்றக் கல்லொக்கும் நெஞ்சு " " தங் காது " " அப்புறங்கழன்று " " கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் " என்னுமித் தொடர்கள் பண்டித மணிக ளின் ஆராய்ச்சிக் குரியன என்பதனை மீண்டும் தெரியப்படுத்து கின்றோம்.

## (தாடகை வீழ்ச்சி.)

அரிய பலமுடையவளும் கொடுந் தொழிலுடையவளுமான மாயச்சழக்கி-தாடகை கொலையுண்டு வீழ்ந்த வீழ்ச்சியைப்பற்றி ஸ்ரீ வான்மீகி பகவான் சிறப்பாக யாதொன்றும் ஈண்டுக் கூற

வில்லை யெனினும், நமது தமிழ்க் கவிச்சக்கரவர்த்தி கூறுமற் செல்லவில்லை ; பின்வரும் மூன்று செய்யுட்களால் சில சிறப்புரைகள் கூறிச் செல்வதையும் பின்னர் ஒரு செய்யுளால் கூற்றுவன் துணிவைக் கூறிச் செல்வதையும் நேயர்கள் கவனிப்பாராக.

கம்பநாட்டாழ்வார்

" பொன்னெடுங் குன்றம் அன்னான் புகர்முகப் பகழி யென்னும்
அங்நெடுங் கால வன்காற் றடித்தலும் இடித்து வானிற்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேகம்
மின்னொடும் இடியி னோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்."

" பொடியுடைக் கானம் எங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகள் மீதாறும்
முடியுடை யரக்கர்க் கந்நாள் முந்திய பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்."

" கான்றிரிங் தாழி யாகத் தாடகை கடின மார்பத்
தூன்றிய பகழி வாயூ டொழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக் கானம் எல்லாம் ஆயின அந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானந் தொடக்கற்று வீழ்ந்த தொத்தே"

பொருள்:— " மகாமேருபோல் சலியாது நின்று போர் செய்த ஸ்ரீராமபிரானுடைய பாணமென்னும் யுகாந்தகாலக்காற்றானது விசைகொண் டடித்தலும், கடையுகக்காலத்து எழுந்து வானில் இடித்துக் கல்மாரி பெய்ய நிற்கும் மேகமானது, மின்னலோடும் இடியினோடும் வீழ்வதே போல் தாடகை வீழ்ந்தனள்."

இதில் தாடகைக்குக் குறித்துள்ள உவமானம் வெகு சிறப்பாக அமைந்திருத்தலை நன்கு கவனிக்கவும். மேகம் - தாடகை மேனி ; இடி - காஜ்ஜனை ; மின்னல் - செம்பராகம்படச்சிவந்துள அவளது கூந்தல் ; கன்மாரி — அவளெறிந்த கற்கள் ; கடையுகம் — அரக்கராக்கம் ; கடைக்காற்று - ஸ்ரீராமபிரானது பகழி; இது ஒரு உற்பாத சூசனை.

"புழுதிகள் நிறைந்துள அக்கானகம் எங்கணும் இரத்த ஆறு நிறைந்திருக்கும் படியாக வீழ்ந்துற்ற மாமிசம் பொருந்திய பற்களுடைய திறந்த வாயுடன் கூடிய தாடகை (யின் சரீரம்) ஒவ்வொரு தலையினிடத்தும் ஒவ்வொரு கிரீடத்தைப் புனைந்துள்ள (தசக்கிரீவனாகிய) அரக்கனுக்கு, அந்த நாளில், கெடுகாலத்தை முந்திக் குறிப்பதற்கோரடையாளமாம்படி. அறுபட்டுப்பூமியிலே வீழ்ந்த அவ்வரக்கனது வெற்றிக்கொடியை யொப்பா (யிற்று)ளுள்."

இதுவும், இலங்காதிபதியாகிய இராவணனது தோல்வியை யுணர்த்த வைத்துள்ளதொரு, உற்பாத சூசனையேயாகும்.

"அந்தப் பெரிய பாலைவனமும் மாறுபட்டுக் கடலெனத் தோன்றும்படி ஸ்ரீராமபிரானால் கொல்லப் பெற்ற தாடகையினது வன்மைகொண்ட மார்பகத்திலூன்றிப் பதிந்துள்ள ஸ்ரீராமபாணத்தின் வழியே வழிந்து பெருகிவரும் இரத்த வெள்ளமானது, சாயங்காலத்திற் றோன்றிய செவ்வானமானது ஆகாயத்தொடக்கு நீங்கிப் பூமியில் வீழ்ந்திருத்தற்கு ஒப்ப, நிறைந்த அந்தக்காடெல்லாம் நிறைந்தது."

இதுவும் உற்பாதசூசகமே யன்றோ?

இனி, தாடகையின் முடிவு கண்ட கூற்றுவன்தனது நிலைமையையும் நமது கவிப் பெருமான், கம்பநாட்டாழ்வார், கீழ்வருஞ் செய்யுளொன்றால் மிக அற்புதமாகக் குறித்திருத்தல் காண்க.

"வாசநாள் மலரோ னன்ன மாமுனி பணிம றுத
காசுலாங் கனகப் பைம்பூண் காகுத்தன் கன்னிப் போரில்
கூசிவாள் அரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி
ஆசையா லுழலுங் கூற்றும் சுவைசிறி தறிந்த தன்றே."

பொருள்:— மணம் பொருந்திய தாமரையில் வீற்றிருக்கும் பிரமனைப்போன்ற விசுவாமித்திர முனிவரின் கட்டளையை மறு

க்க முடியாது நின்ற - ஒளிவீசும் பொன்னுபரணத்தை யுடைய காகுத்த ராமனது இப்பெண்போரில், வாளுடைய இராக்கதக் கூட்டத்தின் உயிர் குடித்தற்கஞ்சி, நீண்ட நாட்களாக ஆசை யுழந்து கூசித் திரிந்து கொண்டிருக்கும் யமனும் சிறிது சுவை யறிந்தான்.''

இச்செய்யுள், ''இனி அரக்கர் அழிவு அடிக்கடி நேரு'' மென்பதை யுணர்த்தியதும் காண்க. இச்செய்யுளின் கருத்திற் கிணங்கவே, பின்னும் பல இடங்களில், நமது கவிகுல சக்கரவர்த்தி, ''இராமனை எமனுக்கு அரக்கரது உயிரை விருந்திட்ட தன்மை'' யையும் கூறியிருத்தலை யுணர்ந்து கொள்க.

பின்னர், தாடகை வீழ்ச்சியினால் தேவர்கள் அடைந்துள மகிழ்ச்சியும் செய்கையும் இருபெரும் புலவராலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

**வான்மீகி பகவான்.**

> ''அத்தாடகை ஸ்ரீராமனால் அடியுண்டு மாண்டது கண்ட தேவேந்திரனும் தேவர்களும், ''நல்லது ; நல்லது'' என்று ஸ்ரீ ராமனைப் புகழ்ந்து கொண்டாடி, விஸ்வாமித்திரரைப் பார்த்து, ''மாமுனிவரே ! உமக்குச் சுபமுண்டாகட்டும் ; நாங்களெல்லாவரும் உமது காரியத்தைக் கண்டு களிப்படைந்தனம் ; இராகவபிரானிடத்தில் உமக்குள்ள களிப்பையும் பிரேமையையும் இப்போது காட்டிடவேண்டும் ; பிருசாச்வரிடமிருந்து தவத்தால் நீர் பெற்றிருக்கும் அஸ்த்ர வித்தையை இராமனுக்குக் கற்பிக்க வேண்டும், இராமன் நியமத்துடன் உம்மைப் பின்தொடர்ந்து சுச்ரூஷைகள் செய்து வருவதால், அவ்வுபதேசத்துக்கு நல்ல பாத்திரரே யாவர் ; மேலும், இவ்வவதார புருஷரால் தேவகாரியங்கள் பலஆகவேண்டியிருக்கின்றது'' என்று சொல்லிப் போயினார்.''

இக் கருத்தினைக் கம்பநாட்டாழ்வார், பின்வரும் ஒரு செய்யுளாற் குறித்துத் தாடகைப் போர்ப்படலத்தை முடித்துவிடுகிறார். செய்யுள் பின்வரும்.—

க௨.

"அவனிமுழு துண்டு மயிரா வதத்துன்
பவனி தொழுவார் படுத்தும்—புவனி
உருத்திரா உன்னுடைய ஓரங்கல் நாட்டிற்
குருத்திரா வாழைக் குழாம்."

**பொருள் :—** பூமியில் பிரஸித்திபெற்ற **உருத்திரன்** என்று பெயர் பெற்ற அரசரேறே! இவ்வுலகத்துள்ளார் யாவரும் வந்து விருந்துண்டும், மற்றும் ஐராவதம்போன்ற உனது பட்டத்து யானையின் மீது பவனி வரும்போது உனது பவனியைப் பார்க்க வந்து (உனது அழகையும், வீரத்தையும் கருணையாகிய அரசர்க்குரிய எல்லாப் பெருங்குணங்களையும் நினைத்து நினைத்து உன் மேலாசை கொண்ட பேரன்பினால்) உன்னை விரகதாபத்துடன் தொழுவார்களாகிய வீரமகளிர்கள் தமது தாபம் நீங்கப்படுத்தும் உன்னுடைய ஓரங்கல் என்னுப இந்த நாட்டில் வாழைக் குழாங்களுள் குருத்தே இரா போல் தோன்றுகின்றது.

**குறிப்பு :—** தாபம் நீங்க வாழைக் குருத்தைப் படுக்கையாக விரித்துப் படுத்துக் கொள்ளல் முறை போலும்.

இரண்டாம் முறை நம் கவிப்பெருமான் சோழமன்னனிடம் பிணங்கிப் பிரிந்தபோது, ஆந்திரநாட்டில் ஓரங்கல் நகரிலிருந்து அரசாட்சி புரிந்தவனை — காகதீய கணபதியரசருள் பிரஸித்தனை பிரதாபருத்திர மன்னனைச் சேர்ந்தார் என்பது, கம்பர் சரித்திரத்தின் ஒரு பகுதியாகக் குறிக்கப்பட்டிருக்கின்றது. இச்செய்தி ஆராய்ச்சிக்குரியதொன்றேயாம். பிரதாபருத்திரீயம் என்னும் வடமொழி அலங்காரநூலொன்று, இம்மன்னனையே உரிமையாக்கிப் பாராட்டிப் போயிருக்கின்றது. அந்நூலினால் இப்பெயருடை மன்னன் வித்வான்களை ஆதரித்தவன் என்பது போதருகின்றது. இதுவும் ஆராய்ச்சிக்குரியதொன்றேயாம். இம்மன்னன் தென்னாடு முழுதும் வெற்றி கொண்டான் எனத்தெரிதலால், நம் கம்பர், இவனைக்கொண்டு

தம்மிடம் பகைமை பாராட்டிய சோழமன்னன் மேலிருந்த செற்றத்தைப் போக்கக் கருதினர் போலும் என்றும் ஊஹிக்கின்றார்கள்." இங்கே "உருத்திர" என்றே குறித்திருப்பதால், இம்மன்னனை, வேறொரு, "வீரருத்திர"னும், என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.

சோழனிடம் கம்பர் பிணங்கிப் பிரிந்தபோது, அவனிலும் சிரேஷ்டனாயிருந்த சேரமன்னனிடம் கம்பர் சென்று, அவனைத் தமக்கு அடைப்பை கட்டிவரச் செய்து சோழனையஞ்சவைத்தார் என்பதும் ஒரு வழக்காக இருக்கின்றது. இவை யாராய்ச்சி பலத்தால் துணியப்படவேண்டும்.

கரு.

"இல்லென்பார் தாமவரை யாமவர்தம் பேரறியோம்
பல்லென்று செவ்வாம்பல் முல்லையையும் பாரித்துக்
கொல்லென்று காமனையுங் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனரென் நெஞ்சைவிட்டுப் போகாரே."

பொருள் :— புறக்கோட்டம் தமது வீடென்று சொல்லிப் போனவராகிய அவரது பெயரின்னதென்று அறியவில்லை; செவ்வாம்பலுடன் பொருந்தியுள்ள முல்லையரும்பையே தமது ஆதாரங்களுடன் கூடிய பல்லென்று புன்னகையிற் காட்டிவிட்டு, என்மேல் மலர்க்கணைகளை யெய்து எனது அறிவைக் கொல்லும்படியாகக் காமனுக்கும் கண் காட்டி, என்னைக் கோபுரக்கீழே நில்லுமென்று சொல்லிப்போனவராகிய அம்மங்கையர், என் நெஞ்சைவிட்டுப் போகாமலிருக்கிறார்.

கம்பநாடர், தமது வடதேசப் பயணத்தில், திருவொற்றியூரில் தங்க நேர்ந்தபோது அவ்வூரிலுள்ள சதுரானனபண்டிதன் மடத்திலிருந்த வல்லியென்னும் அழகுடைய மாதொருத்தியைக் கோபுரவாயிலிற் கண்டு காதலித்தபோது, இச்செய்யுளைச் சொன்னார் என்பது புலப்படுகின்றது. இதற்குப்பின் வருஞ் செய்யுள் இந்நிகழ்ச்சியை வற்புறுத்திக்கொண்டிருத்தலைக்காண்க.

கச.

" நடக்கில் அன்னமாம் நிற்கினல் வஞ்சியாம்
கிடக்கில் ஓவியப் பாவை கிடந்ததாம்
தடக்கை யான்சது ரானன பண்டிதன்
மடத்து ளாளென் மனத்துறை வல்லியே."

பொருள் :-- கொடையிற் சிறந்த (திருவொற்றியூர்ச்) சதுரானனபண்டிதரது மடத்துள்ளவராகி, என் மனத்தை விட்டு நீங்காத வல்லியென்னும் பெயருடைய அம்மாதரசியானவள், நடக்கும்போது அன்னம் போலவும், நின்றபோது நல்ல கொடி போலவும், படுத்திருக்கும் போது சித்திரப்பதுமை படுத்திருந்தது போலவும் இருக்கின்றாள்.

இச்செய்யுளால், நம் கம்பநாட்டாழ்வார், தாம் கண்டு மோகித்த மாதரசியாகிய வல்லியைத் தேடிச் சதுரானன பண்டிதர் மடத்துச்குச்சென்று, முன்னமே தம்மிடம் மனம் நெகிழ்ந்திருந்த அவளது நேசம் பெற்றனர் என்பது விளங்குகின்றது.

"மூன்றாம் ராஜராஜசோழன் திருவொற்றியூர் உத்ஸவமொன்றுக்குச் சென்றிருந்தபோது சைவமதாச்சாரியராகிய சதுரானனபண்டிதரும் வாகீசபண்டிதரும் உடனிருந்தனர்" என்று ஒரு சாஸனம் கூறுகின்றது. (Ep. Report 1911-14). கம்பர் கூறியபடி திருவொற்றியூர் மடாதிபதியான சதுரானன பண்டிதர் இவர் போலும்" என்று தமிழ் நாவலர் சரிதையின் பதிப்பாசிரியர் தமது விசேடக்குறிப்பில் குறித்திருக்கிறார். இதனைப்பற்றி ஆராயும்போதும் கம்பரது காலம் நிர்ணயிக்கப் படலாம்.

கரு.

" புக்கு விடைதழுவிக் கோடுழுத புண்ணெல்லாம்
இக்கிலுயர் காளிம்பன் தென்புழல்மான்—அக்கணமே
தோள்வேது கொண்டிலளேல் சுந்தரப்பொன் தோன்றலுக்கு
வாழ்வேது கண்டிலமே மற்று."

**பொருள்** :—வெற்றிக் களத்திற் புகுந்து, பொருதற்கு விடப்பட்ட ஏற்றொன்றை இடையர்முறைப்படி தழுவிப்பொருத போது, அவ்வேற்றின் கொம்புகள்பட்டுத், தேசத்திற் சிறந்த காளிம்பன் என்னும் இடையர் பெருமானுடைய மார்பிலும் தோள் களிலும் உழுதல் உண்டாயிருக்கும் புண்களெல்லாம், அவன் மனைவியாகிய தெற்கிலுள்ள புழற் கோட்டத்துப் பெண்ணரசி யார் அந்த க்ஷணமே, களங்கின்டிய வருத்தந்தீர அவன் தோட்கு வேதூட்டினாலன்றிச் சுந்தரப் பொற்றோன்றலாகிய காளிம் பற்கு, வாழ்வு இன்புடைத்தாக இருத்தல் கண்டிலோம்.

இச்செய்யுள், **தமிழ் நாவலர் சரிதை** யில், "கம்பர் வல்லி வீட்டுக்கு எருமை வாங்கிவரப்போய் காளிம்பன் (என்னும்) நிரைமேய்ப்பானைக் கண்டு, அவன்பேரில் (ஓர்) செய்யுள் சொல்ல, அவன் ஈன்ற எருமை ஆயிரம் கொடுத்த **வெண்பா** என்னும் தலைப்பின் கீழ்க் காணப்படுகின்றது.

இச்செய்யுளின் பொருட்கும், காளிம்பனிடம் கம்பர் வாங்கி வந்ததாகச் சொல்லப்பெறும் பொருட்கும் யாதும்சம்பந்தம் காண கிலம். இங்ஙனம் பொருத்தமில்லாச் செய்யுட்களும் பொருத்தமில் லாக்கதைகளும் பலவாகப் புனையப்பெற்ற தன்மையே நம்நாட்டுக் கவிவள்ளலார்களது உண்மைச் சரிதத்தினை மயங்கவைத்துளது.

கசு.

"அண்ணல்திரு வாலி யணிமயிலை யத்தனையும்
வெண்ணிலவின் சோதி விரித்ததே—நண்ணூந்
தடந்துப்பு விற்பாணந் தன்முகத்தே கொண்டு
நடந்துப்பு விற்பாள் நகை."

**பொருள்** :—பவளம் போன்ற இதழையும் வில்போன்ற புருவங்களையும் பாணம் போன்ற கண்களையும், பொருந்திய விசாலமான தன் முகத்தே கொண்டு, தெருவில் நடந்து உப்பு விற்பவளினது புன்னகை பொருந்திய பற்கள், பெருமை பொருந் திய திருவாலியென்னும் பெயருடைய பொற்கொல்லர் வாழும்

அழகான மயிலாப்பூர் எங்கணும் வெண்மையான நிலவின் ஜோதியை விரித்துளது.

இங்ஙனம், கம்பர், தட்டான்மேற் பாடியது, தமது தாஸியாகிய வல்லிக்கு நகை செய்து கொடுத்ததற்காக என்பர். இங்ஙனம் குறித்துள இச்செய்திக்கும், இதற்கு மேற்கோளாகக் கூறப்பெறும் மேற்குறித்த செய்யுட்கும் ஏதும் பொருத்தங் காண்கிறலம்.

கஎ.

" சொல்லியைச் சொல்லின் அமுதான செல்வியைச் சொற்கரும்
வில்லியை மோக விடாய் தணிப்பாளை விழியம்பினுல் [பின்
கொல்லியைக் கொல்லி யம்பாவை யொப்பாளைக் குளிரொற்றியூர்
வல்லியைப் புல்லிய கைக்கோ விவள் வந்துவாய்த்ததுமே."

பொருள் :—நல்ல இனித்த சொல்லுடையாளை, அமுதம் போன்ற அச்சொற்களையுடைய செல்வியை, தோகையுடைய கரும்பு வில்லையுடைய மன்மதனையும் தனது விழிகளாகிய கண்களால் வெற்றிகொள்பவளை, எனது மோகவிடாய் தணிப்பவளை, கொல்லிப்பாவை போலும் அழகுடையவளை, (இத்தகைப் பல்நலனும் பெற்ற) குளிர்ந்த ஒற்றியூர் வாஸியாகிய வல்லியென்னும் பெண்ணரசினைத் தழுவிய என் கைகட்கோ இவள் (இந்தக்குரும்பை யென்னும்தாதி) வந்து பொருந்தியதாகும்.

இச்செய்யுள், தமிழ் நாவலர் சரிதை யில், "பின்பு ஒருகால் குரும்பை யென்னுந் தாதியைத் தழுவிச் சொல்லிய கலித்துறை" என்னும் தலைப்பின் கீழ்க் காணப்படுகின்றது.

கஅ.

" ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதற்கு நல்லிரவின் மாணுக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி."

**பொருள் :**— திருவொற்றியூரைக் காப்பதற்கு இருக்கின்ற காளியே! எங்கும் வெற்றியே சொல்லப் பெறுகின்ற காகுத்த ராமபிரானது உண்மைச் சரிதையைத் தொடர்ந்து நான் சொல்லி வரும்போது, இந்த நல்ல இரவிலும் எனது மாணுக்கர்கள் பின்னிடாமல் எழுதி வருதற்கு (அநுகூலமாக) அணையாதிருக்கும்படியாகப் பந்தம் பிடித்துதவுவாயாக.

இச் செய்யுளால், கம்பர் தம் இராமாயணத்தைச் "சடையன் வெண்ணெய் நல்லூ"ரில் மாத்திரம் அல்லாமல் திருவொற்றியூரிலுமிருந்து பாடினுராமென்பதும், இரவிலும் தம் நூலை யியற்றினுராமென்பதும், மாணுக்கர் பலர் உடனெழுதிவந்தனரென்பதும் பெறப்படுகின்றன.

குறிப்பு:—வெற்றியூர்-அயோத்தி யென்னுமாம்; ந + யோத்தி — அயோத்தி = "ஒருவராலும் வெல்லவொண்ணுதது" என்பது பொருள்; அதாவது எப்போதும வெற்றியையுடையது என்பதாம்; இதனையே யிங்குக் குறித்திருக்கும் "வெற்றியூர்" என்னும் பதம் குறித்துளதென்க. மெய்ச்சரிதை - உண்மைக் கதை: இது "இதிஹாஸம்" என்னும் பொருட்டு; இதி ஹ ஆஸ - என்று உண்மைக்கதையின் பெயரைக் குறிக்கின்றது. "ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே" என்பதற்கு= "ஒற்றி—விலகிநின்று, ஊர்காக்க - ஊரைக்காப்பதற்காக, உறைகின்ற - வஸிக்கின்ற" காளியே—என்னும் பொருள் கொள்ளவும் இடமிருக்கின்றது காண்க.

கக௫.

"வில்லி களந்தைமின்னே விண்ணவர்தங் கோமானை
வல்லநெடுஞ் சேடனையவ் வாணனையாம்—புல்லியுறப்
பார்க்கும்போ துந்தாளைப் பற்றும்போ துந்தனத்தைச்
சேர்க்கும்போ துந்நினைப்பம் சென்று."

**பொருள் :**—வில்லியென்னும் களந்தை மின்னே! யாம் உம்மைத் தழுவிப் பொருந்தவே, உம்மைப் பார்க்கும்போது விண்ணவர் கோமாணுகிய இந்திரனையும் உமது தாள்களைப் பிடிக்கும்

போது வன்மை நீண்ட ஆதிசேஷனையும், தனங்களைப் பற்றிச் சேர்த்துத் தழுவும்போது அந்த வாணாசுரனையும் (எம்மனத்தால்) சென்று நினைத்துக்கொண்டிருப்போம்.

விண்ணவர் கோமான் - இந்திரன்; ஆயிரங்கண்ணுடையான் ஆனமைபற்றி, அவனைப்போல் ஆயிரங் கண் கொண்டே உன் அழகைக் காணவேண்டுமென்றும், வல்ல நெடுஞ் சேடன் - ஆதிசேஷன்; ஆயிரந்தலையுடையான் ஆனமைபற்றி, அவனைப் போல் ஆயிரந்தலைகொண்டு உன் பாதங்களை வணங்கித் தொட வேண்டுமென்றும், அவ்வாணன் - வாணாசுரன்; ஆயிரந்தோளுடையான் ஆனமைபற்றி, அவனைப்போல் ஆயிரந்தோள்கள் கொண்டு உனது தனங்களைப்பற்றி யனுபவிக்கவேண்டுமென்றும் என் மனம் நாடுகின்றது என்பது திரண்ட கருத்தாகும்.

இச்செய்யுள் பார்த்ருஹரி யென்னும் சமஸ்க்ருதவித்வான் சொன்ன சுலோகத்தின் ஒருவாறான மொழி பெயர்ப்பாகக் காணப்படுகின்றது. அந்த சுலோகமாவது :—

" ஹே பாலே! தவாதர ஸுதாரஸ பானகாலே
சேதோ மதீயம் அபிவாஞ்சதி சேஷபாவம்
ஆலிங்கனே தவ விரோசன பௌத்ர பாவம்
ஆகண்டலத்வம் அகிலாங்க நிரீக்ஷணேஷு."

பொருள் :—ஏ! பெண்ணரசியே!! உனது அதரத்தினின் றொழுகும் அமுதத்தைப் பானம் பண்ணும்போது என் மனமானது ஆயிரம் நாவுடைய ஆதிசேஷாம்சத்தை விரும்புகின்றது; உன்னை யாலிங்கனம் செய்து கொள்ளும்போது விரோசனனது பௌத்திரனாகிய ஆயிரந் தோள்களுடைய வாணாஸுராம்சத்தை (என் மனம்) விரும்புகின்றது; உனது அழகிய அங்கங்களைப் பார்த்து அநுபவிக்கும்போது ஆயிரங்கண்கள்பெற்ற இந்திராம்சத்தை (என் மனம்) விரும்புகின்றது.

உ௦.

" நெற்பயிர் விளைகழனி நென்மலி வாழ்தச்சன்
கற்படு திண்டோளன் கங்கண கணகணவன்
விற்புரை திருநுதலாள் மின்மினு மினுமினுவை
சொற்படி வேலைசெய்வான் தூந்தரு தருதருமி."

இதன் பொருள் வெளிப்படை: இச்செய்யுள் தமிழ்நாவலர் சரிதையில் " இதுவும் ஒரு பாட்டு " என்னுந் தலைப்பின் கீழ்க் காணப்படுகின்றது. இச்செய்யுள் பாடியவர்க்கு, இப்பாட்டுடைத்தலைவர் ஆயிரங்கலநெல் ஸன்மானம் செய்துள்ளாரென்பது சொல்லப்படுகின்றது; . இதற்கு மேற்கோளாகச் சோழமண்டல சதகச்செய்யுளொன்று காட்டப்படுகின்றது; அச்செய்யுள் பின்வருமாறு :—

" நிச்சமுறவே நெற்பயிராய் நீளுந்தமிழ்க்கு நென்மலிவாழ்
தச்சன் பொலியா யிரக்கலநெற் றந்தானுலகிற் றுதாவாய்
மெச்சு மவன தாண்மையினல் வென்றே கொடியின் விருதுகட்டி
வைச்ச கொடையின் தரமெளிதோ வனஞ்சேர் சோழமண்டலமே "

என்பதாம்.

உக.

" வெங்கண் சிவந்து வெடிவால் முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம் பிளக்க வரும்புலி யேயன் றிரணியனைப்
பங்கம் படப்பட வள்ளுகி ராலுரம் பற்றியுண்ட
சிங்கம் இருப்பது காண்கெடு வாயென் சிந்தையுள்ளே."

**பொருள்** :—கொடிய கண்களில் சிவப்புத்தோன்ற வெடிவாலை முறுக்கிக்கொண்டு கோபித்தெழுந்து எனது அங்கம் பிளப்பதற்கென்று வருகின்ற புலியே! அன்றொருநாள் புலி போலும் இரக்கமில்லாத் தொழில் செய்துகொண்டிருந்த இரணியன் என்னும் ஓர் தீயோனைப் பங்கப்பட்டுப் போயழியும்படியாகத் தனதுகூரிய நகங்களைக்கொண்டு, அத்தீயோனது மார்பைப்பிளந்துண்டழித்த நரசிங்கமூர்த்தி என் சிந்தையுள்ளே இருக்கின்றது; அதனைக் கண்டு கொள்வாய்; நீ கெடுவாய் என்பது திண்ணம்.

இச்செய்யுளும் மேற்குறித்த செய்யுளும் கம்பர்க்கும் சோழவரசற்குஞ் செற்றம் உண்டாயிருந்த தென்பதையும் கம்பரைக் கொல்லுவான் சோழவரசன் கரும்புலியை ஏவிவிட்டான் என்பதையும், அதிற்றப்பிப்பிழைத்த கம்பரைப் பின்னரும் சோழவரசன் தன்வில்லில் அம்பேற்றி எய்தழித்தான் என்பதையும் குறித்துளவென்பார்.

உ௪.

“ வில்லம்புஞ் சொல்லம்பு மேதகவே யாயினும்
வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து — வில்லம்பு
பட்டுருவிற் றென்னையென் பாட்டம்பு உன் குலத்தைச்
சுட்டெரிக்கு மென்றே துணி.”

**பொருள் :—** வில்லால்வரும் பாணமும், சொல்லால் வரும் பாணமும் மேம்பட்டனவாகக் குறிக்கப்படுமாயினும், வில்லம்பினும் சொல்லம்பே பெருமையுடையதாகும்; என்னை உனது வில்லம்பானது மார்பிற்பட்டு உருவியிருக்கின்றது; என் பாட்டாகிய அம்போ உன்குலத்தையே சுட்டெரித்து விடும் என்று துணிந்துகொள்.

இச்செய்யுட்குப் பாடாந்தரங்களும் பல. வில்லின் பாணம் ஒருவனையே கொல்லும்; சொல்லம்போ குலத்தையே அழிக்குமென்பதாம்.

உ௫.

“ ஆன்பாலுந் தேனும் அரம்பைமுதன் முக்கனியும்
தேன்பாய வுண்டு தெவிட்டுமனம — தேம்பாய்
மாகதும்போ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தேனும் இனி.”

**பொருள் :—** திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலாரே! பசுவின்பாலும் தேனும் வாழை முதலிய முக்கனிகளும் தினந்தோறும் உமது நன்கொடையினால் மதுரம்பாய வுண்டு தெவிட்டி யனுபவித்த என்மனமானது, கம்பன் (நான்) இறக்கும் (இப்) போதேனும் அதன் பின்னரேனும் கெடுதலாக இருந்து மறந்து விடுமோ? (ஒருகாலும் இராதென்றபடியாம்.)

இச்செய்யுள், கம்பர் இறக்குந்தருணம். சடையப்பவள்ளலாரது கொடையையும் ஆதரவையும் பற்றிப் பாடியதென்பர். இதற்கு மேற்கோளாகப் பின்வரும் சோழமண்டல சதகச் செய்யுளையும் நோக்குக.

" ஆன்பால் நறுந்தேன் முக்கனிநீ டமுதிற் சுவையா றுடனருந
தான்பா லணைய மறப்பதிலைச் சடையா வென்று தமிழ்ப்பாதும்
தேன்பா யலங்கர் கம்பனுக்குச் செழும்பா ரிடத்திற் செய்தநன்றி
வான்பா லிருக்கச் செய்துநலம் வைத்தார் சோழ மண்டலமே."

என்பதாம்.

உ௪.

" இன்றோநம் கம்பன் இறந்தநாள் இப்புவியில்
இன்றோநம் புன்கவிகட் கேற்றநாள்—இன்றோதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள்."

இதன் பொருள் வெளிப்படை. இச்செய்யுள் கம்பர்மேற் பாடிய கையறம். புன் கவிகள் - புல்லிய கவிவாணர்கள். நூல் வாங்குதல் - தாலி (யறல்) பெறுகுதல்; " நூல் - நல்ல வித்தார காவியங்கள்; வாங்கும் - எடுக்கப்படும் (அழியும்); நாள் - தினம் என்னும் பொருளும் தொனிக்கின்றது காண்க

உ௫.

## (பிற ஆதாரங்கள்.)

" கம்பன் பிறந்தவூர் காவேரி தங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர்—செம்பதுமத்
தாதகத்து நான்முகனுந் தாதையுந்தே டிக்காணு
ஓதகத்தார் வாழுமழுந் தூர்."

பொருள்:—கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பர் பிறந்த வூராகவும், பொன்னியெனும் பெயருடைய காவேரிநதி தங்கியிருக்குமூராகவும், கும்பத்திலுதித்தவராகிய அகஸ்திய முனிவரது சாபத்தால் குலைந்த ஊராகவும், செவ்விய தாமரை மலரினகத்து வீற்றிருக்கும் பிரமனும் அவரது தாதையாகிய விஷ்ணுவும்

தேடிக்காணாத - தம்மைத்துதித்து ஓதுவார்தம் இருதயமே குடிகொண்டவராயுமுள்ள சிவபரஞ்சுடர் வாழும் ஊராகவு முள்ள அழுந்தூரே (எனது பிறந்த ஊர் என்றனன் என்பதாம்.)

குறிப்பு :—இச்செய்யுள் "தமிழ் நாவலர் சரிதை" யில், "திருவழுந்தூர்த்தாதியைச் சோழன் எந்த ஊரென்று கேட்ட போது பாடியது" என்னும் தலைப்பின் கீழ்க் காணப்படுகின்றது. இதனாற் கம்பநாட்டாழ்வார் பிறந்தவூர் திருவழுந்தூர் என்பது தெளிவாகின்றது; இந்த "அழுந்தூர்" என்பதைத் தேரழுந்தூர் என்று குறிக்கின்றனர். இந்தத் தேரழுந்தூர், சோழநாட்டுக் குற்றாலம் இருப்புப்பாதை நிலயத்து (ரயில் வேஸ்டேஷனு) க்குத் தென்கிழக்கில் இரண்டுமைல் அளவிலுள்ளது. இதுவே கம்பர் பிறந்தவூரென்பது பலப்பிரமாணங்களால் அறியக்கிடக்கின்றது. இவ்வூரிலுள்ளதொரு தற்போதைய வைஷ்ணவ அக்கிரகாரத்துக்குத் தெற்கில் அரைமைலுக்கப்பால் கம்பரது வீடிருந்ததாகச் சொல்லுகின்றார்கள்; அந்த இடம் தற்போது கிராம சமுதாயமாயிருந்து பங்கு பிரிக்கப் பெற்றுள்ளதாகவும் கூறுகின்றனர். இது ஒரு மேடாகப் பூமட்டத்துக்கு ஒன்பதடி உயரத்திற் காணப்படுகின்றது. இதனைக் கம்பர்மேடு என்று கூறுகின்றார்கள்; இது உத்தேசம் ருO-ஸெண்ட் நிலமாகலாம்; கருO-குழி நிலமிருக்கும்.

கம்பர், இத்திருவழுந்தூரினர்தா மென்பதனைக் கம்பராமாயணப் பாயிரச் செய்யுள்களுளொன்றாகிய, பின்வருஞ் செய்யுளும் வற்புறுத்திக்கொண்டிருத்தல் உணர்க.

"நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் சொல்ல
ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான் மீகி யென்பான்
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூரு வச்சன்
காரணி கொடையான் கம்பன் தமிழினாற் கவிதை செய்தான்."

(கம்பராமாயணப் பாயிரம்.)

உகூ.

"வாங்கு திரைகடலேழ் மஞ்சனநீர் வான்வரையின்
ஓங்கு மகாமேரு உண்டியர்கல்—வீங்குபுகழ்
இந்திரன்சம் பந்தி இறையவனும் பண்டாரி
சந்திரகுல வங்கிசந் தான்."

பொருள் :—வளைந்த அலைகளையுடைய ஏழ்கடலும் ஸ்நானம் செய்தற்குரிய நீராகும்; ஆகாயவரையில் ஓங்கி வளர்ந்திருக்கும் மகாமேருமலையே உண்டி தங்குமிடமாகும்; நிறைந்த புகழுடைய இந்திரன் சம்பந்தியானவன்; இறைவனாகிய பரமசிவன் பண்டாரியாவார்; இப்பெருமைகளையுடைய நீ சந்திரகுல பரம்பரையைச் சேர்ந்தவன்.

விவரம் :—இது, செந்தமிழ் ௩-ம் தொகுதியின் ௬௭-ம் பக்கத்தில் "செந்தமிழ்க்குத் தொண்டு செய்தவர்" என்னும் பெருந் தலைப்பின் கீழ்க் குறிக்கப்பெற்றுள்ள வியாஸங்கள் பலவற்றுள் இரண்டாவதாகக் காட்டியுள்ள "கம்பர் சிவிகை பாண்டியன் ஏந்தல்" எனப்பெயரியதொரு சிறு தலைப்பின்கீழ்க் கண்ட செய்யுளாகும்.

இதன் விவரம் :—"கம்பர் மதுரைச் சொக்கலிங்க ஸ்வாமியைத் தரிசித்துவரல் வேண்டுமென்று சோழராஜனிடம் கேட்டபோது, அவ்வரசன் பாண்டியனைப் பாடாது போய்வரல் வேண்டுமென்று கூறினான்; கம்பர் உடன்பட்டு மதுரைக்குச் சமீபத்தில் வருகையில் பாண்டியராஜன் தெரிந்து கம்பரிடத்தில் எவ்வாறாயினும் கவிகேட்டல் வேண்டுமென்று கருதித் தன் மனைவியுடன் சென்று, அவளருகிலேவரத் தான், கம்பர் சிவிகையைத தாங்கின அளவில் சிவிகை நிலைதளர்ந்தது; அதனைக் கம்பர் தெரிந்து மகிழ்ச்சி கூர்ந்து "இப்பாடலைப் பாடினார்" என்பதாம்.

இதனால் "கம்பர் மூவேந்தராலும் விரும்பிப் போற்றப் பெற்றவராக வாழ்ந்திருந்தனர்" என்பது நன்கு புலனாகின்றது.

"இச் செய்யுளைக் கூறிய பின்னர், கம்பர், அவ்வரசன் மனைவியாரையும் பார்த்து "உமையாளும் நீயும் ஒருங்கொப்பே ஒப்பில்" என்னும் முதலடிகொண்டதொரு வெண்பாவைப் பாடி, யவளையும் மகிழ்வித்துப், பாண்டியவரசனுற் பெருஞ்சிறப் பெய்திச் சுவாமியைத் தரிசித்துச் சென்றனர்" என்பது செந்தமிழ்க் குறிப்பு.

இந்த "உமையாளும் நீயும்" என்று தலைப்புடைய செய்யுளை, நாம், இப்பகுதியின் (கம்பராமாயண ஆராய்ச்சியின்) கநள-ம் பக்கத்தில் கO-என்னும் எண்ணின் கீழ்க்காட்டிப் பொருளும் விரித்திருக்கின்றோம்; ஆண்டுக் கண்டுகொள்க.

உள.

"பொதுமாதர் வீட்டைப் புகழ்பெற வேநெற்
கதிராலே வேய்ந்தருளுங் கங்கைப் — பதிநேர்
வருவெண்ணெய் நாடன் வருநா வலர்க்குத்
தருவான் அவன்சடையன் றான்."

பொருள் :— கங்கைப்பதிக்கு நேரெனவந்த திருவெண்ணெய் நல்லூர் நாட்டையுடையவராகியும், தம்மை நாடிவரும் நாவலர்கட்கு வேண்டுவன தருவாருமாகிய சடையப்ப வள்ளலாமப்பெருமான், பொதுமாதர் வீட்டையும் (நாவலர் பாவலர்க்காகவேண்டி) புகழ் தோன்றும்படியாய் நெற்கதிர்களாலே வேய்ந்தும் கொடுப்பர்.

குறிப்பு :—இச் செய்யுள், செந்தமிழ் மூன்றாந் தொகுதி, பக்கம் பதினொன்றில் "[மேற்கோள்]" என்னும் தலைப்பின்கீழ்க் குறிக்கப்பட்டிருக்கின்றது. இது ஒரு தனிக் கவியாகத் தெரிகின்றது. இச்செய்யுளில் "பொதுமாதர்" என்னும் குறிப்பானது பொதுவாகக் குறிக்கப்பட்டிருப்பினும், இந்தப் பொது மாதர், "கம்பர் விழைந்த வல்லி என்னும் பொது மகள்தான்" என்னும் தீர்மானத்தை இச்செய்யுளின் பின்னிரண்டடிகளும்

வற்புறுத்திக்கொண்டிருக்கின்றன காண்க. என்னை? பின்னிரண்டடிகள் "திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலாரே அப்பொது மாதர் வீட்டை நெருக்கிராமனை மேய்ந்தளித்தார்" எனக் குறித்திருத்தலால் என்க; அப்பொதுமாதர் வல்லிதா னென்பதைக் கீழ்வரும் சோழமண்டல சதகச் செய்யுள் குறித்துக் கொண்டிருத்தல் காண்க.

(சோழமண்டல சதகம்.)

"தனதானியத்தி லுயர்கம்பர் தாமெய்யென்னுந் தருக்கமையா
வினைமாதிரவில் மெய்க்கிராமன் மேய்ந்தார்வல்லி வீடதல்லால்
கனிமீசார்தமிழ்க்குப் பன்னிரண்டு கடகயானைக் காடளித்த
மனைவாழ்வுடையான் வெண்ணெய் நல்லூர் வாழ்வான்
சோழமண்டலமே"

இந்த வல்லி யென்பாள், கம்பர் விழைந்த பொதுமகள்தானென்பதை, இப்பிரிவில் (கம்பராமாயண ஆராய்ச்சியில்) கசுரு-ம் பக்கத்தில் கஎ-என்னும் எண்ணின் குறிப்பின் கீழ்க்கண்ட "சொல்லியை" என்னும் தலைப்புடைய செய்யுளில் நான்காமடியிற் குறித்திருக்கும் வல்லியை என்னுங் குறிப்பினுற் கண்டு கொள்க.

இன்னும், இவர் வல்லியைப் பிரிகின்றபோது பாடியதாக "வடிப்பாலை வீசுந் திருவொற்றியூர் வல்லி" என்னும் தலைப்புடையதொரு செய்யுளையும், கம்பர், பாடியதாகக் குறிக்கின்றார்கள்.

இக் குறிப்புக்களால், கம்பர், திருவொற்றியூர் வல்லியென்னும் பொதுமகளை விழைந்து பலகாலமிருந்து பிரிந்த பின்னர், குரும்பை யென்னும் மற்றொருத்தியைச் சிலகாலம் அத்துணை விருப்பின்றியே தழுவியிருந்தாரென்பதும், இவ்விருவரேயன்றிக் களந்தைப்பதியிலொருத்தியையும் விழைந்திருந்தாரென்பதும் புலனாகின்றவாறுணர்க. இவ்வுண்மையை (இம்

மூன்றும் பொதுமகளையும் விழைந்தாரென்று முன்மையை) இப்பிரிவின் (கம்பராமாயண ஆராய்ச்சிப்பிரிவின்) கஅச-ம் பக்கத்தில், கஅ-என்னும் எண்ணுக்குறிப்பின் கீழ்க்காட்டப்பெற்றிருக்கும் "வில்லி களந்தை மின்னே" என்னும் தலைப்புடைய செய்யுளை நோக்கித் தெளிக.

(சில வழக்குரைகள்)

நமது கவிப்பெருமான், கம்பநாட்டாழ்வாரது சரித்திரக் குறிப்புகளாகக் கோத்துக்காட்டப்பட்ட "தமிழ் நாவலர் சரிதைச்" செய்யுள்களும் "பிற ஆதாரத்தனிச்" செய்யுள்களுமான இவைகளையன்றிப் பிற சில வழக்குரைகளும் கேட்கப் பெறுகின்றன. அவ்வுரைகளிற் சில பொருந்துவனவும் ஆம்; பொருந்தாதனவும் ஆம் என்பர்.

"கம்பர், சிவகெங்கை ஸமஸ்தானத்தைச் சேர்ந்த நாட்டரசன் கோட்டைப்பதியில் வந்து வதிந்து அங்கே தமது முதுமைக் காலத்தைக் கழித்துச் சமாதியடைந்தனர் என்றும், அச் சமாதிப் பிரதேசத்திலிருக்கும் மண்ணைச் சிறிதெடுத்து நீரிற் குழைத்து உண்ணப்பெற்றால் அக்கம்பரைப்போலவே கல்வியிற் பெருகலாமென்னும் நம்பிக்கையுடன் அந்நாட்டரசன் கோட்டையார், இன்றும் தத்தம் சிறார்கட்கு அங்ஙனம் புரிந்து வருகின்றனர் என்றும் வழக்குரையிருக்கின்றது;" எனினும், இந் நிகழ்ச்சிக்கும் "கம்பர் சோழ மன்னனது வில்லம்பு பட்டிறந்தார்" என்னும் செய்யுளாதாரத்துடன் காட்டப்பெற்ற சரித்திர நிகழ்ச்சிக்கும் முரண்பாடு தோன்றுகின்றபடியால், புலவர்கள் இந்நாட்டரசன் கோட்டை நிகழ்ச்சியை யொப்புக் கொள்ள மயங்குகின்றனர்.

கம்பராம் நம் புலவர் பெருமானுக்கு "அம்பிகாபதி" என்னும் ஓர் மகனும் "காவேரி" என்னும் ஓர் மகளும் இருந்தனராகவும்; மகனாகிய அம்பிகாபதி சோழமன்னனது மகளைக் காதலித்துத் தீண்டினதை யுணர்ந்த அம் மன்னன், சூழ்ச்சியினால்

அவ் அம்பிகாபதியைக் கொன்றுவிட்டனனெனவும்; மகளாகிய காவேரியின் அழகில் மோஹித்துச் சோழ மன்னரிளங்குமரன் பலாத்கரிக்க, அன்னாள் அகங்குலைந்து கம்பங்குழியிலிறங்கி யிறந்துபட்டாளென்றும் வழக்குரைகள் வெளியாயிருக்கின்றன. இவையெல்லாம் கம்பரது சரித்திர நிகழ்ச்சியில் தக்க ஆதாரங்களுடன் பொருந்துவனவாகவில்லையெனத் துணிகின்றாம். கம்பர் பிறந்ததும், பாலூட்டித் தாலாட்டிச் சோறூட்டப் பெற்றதும், அறிவூட்டி நெறிகாட்டி வளர்க்கப்பட்டதும் வெவ்வேறிடங்களிலாகவும் ஜாதிகளிலாகவுமே புலனுவதால், கம்பர் மணமின்றியே பலரைக் காதலித்துக் காமவிழைச்சு நுகர்ந்து காலங்கழித்திறந்தனராமென்பதும் சிலரது துணிபாம்.

இனி, நம்புலவர் பெருமானாரது காலத்தவரென்று பரம்பரைப் பெருவழக்கிற் கூறப்பெற்றுவரும் பெரியாராகிய வைணவ மதாச்சாரியர் ஸ்ரீமந் நாதமுனிகளைப்பற்றி யாராய்தலும், நமது கவிச்சக்கரவர்த்தியின் சரிதக் குறிப்புக்கு ஒரு புடை யாதாரமாகும். பரம்பரையாக வந்துள இப்பெரு வழக்குண்மையை மறுத்துப் போதல் அத்துணைச் சிறப்புமன்று. இந்த "நாதமுனிகளது கோஷ்டியில், நம் கவிச்சக்கரவர்த்தி செய்தருளியுள்ள "இராமாவதாரம்" என்று ஓதப்பெறும் ஸ்ரீராமாயணம் அரங்கேற்றப்பெற்ற" தென்பதே அப்பெரு வழக்கு; இவ்வழக்குறையை நன்கு ஆராய்ச்சி செய்த பின்னர், கொள்ளக்கூடாதாயின் தள்ளிவிடலாம். அதுவரை இதனை மறுத்து நீக்கற்கு யாம் துணியவில்லை.

இந்த நாதமுனிகள், வைணவ மதப்ரவர்த்தகராகிய இராமானுஜர்க்குப் பெருங்குருவாகிய ஸ்ரீ ஆளவந்தார் அவர்களது பாட்டனாராகும் இந்த நாதமுனிகளைப்பற்றி, "ஸ்ரீரங்கக் குறிப்பு" என்னும் நூலில் வரையப்பட்டிருக்கின்றது என்பது பின்வரும் குறிப்பால் வெளியாகும்.

1. "ஸ்ரீ ஆளவந்தார் கி. பி ௯௬௭-ல் அவதரித்தவரென்றும், அவ்வாளவந்தார்க்குப் பிதாமகராகிய நாதமுனிகள் காலம் அதற்கும் முன்னராதல் வேண்டுமென்றும், மண்டயம் ஸ்ரீ உப. வே. அனந்தான் பிள்ளை - திருமலாசாரியவர்கள் "ஸ்ரீரங்கக் குறிப்பு" என்னும் நூலில் எழுதியுள்ளார்கள். இவ்வாறு எழுதியது பெரிதும் பொருத்தமுடைத்தென்பது, ஆளவந்தார் முதலிய ஆசாரியர்க்கு முன்னூல்களிற் சொல்லப்பட்ட காலங்களை அவர்கள் தந்நூலில் தொகுத்துக் காட்டிய "அட்டவணை" யை நோக்குவார்க்கு நன்கு விளங்கும்; அன்றியும், கம்பர் து காலம், 'எண்ணிய சகாத்தமெண்ணூற் றேழின்மேல்' (கி. பி அ௮௫) எனவும், நாதமுனிகள் சந்நிதியில் கம்பராமாயணம் அரங்கேறியதெனவும் பெருவழக்குண்மையால் அம்முனிவர் காலமாக ஆசாரியவர்கள் குறிப்பிட்டது வற்புடைத்தேயாம். "எண்ணிய சகாத்தம் முந்நூற்றேழின்மேல்" எனச் சிலர் எழுதிய பாடம் கம்பரை அதிகப் பழையவராக்குதலால் அது கொள்ளத்தக்கதன்று."

இனி, மற்றோர் வழக்குரையையும் காண்க.

2. "முற்காலத்து நூல்களையே எடுத்தாண்ட புறத்திரட்டென்னும் நூலிற் கம்பராமாயணச் செய்யுட்கள் தொகுக்கப்பட்டிருத்தலும், கி. பி. ௧௧-ம் நூற்றாண்டிலிருந்தவரும் வீரசோழிய வுரையாசிரியருமாகிய பெருந்தேவனார், "கம்பனாரிடைப் பெருமையுளது" (வீரசோழியம், வேற்றுமைப்படலம், எ-ம் செய்யுளுரை) எனவும், நச்சினார்க்கினியர் "கம்பன்" (தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூன்மரபு-உ௫-ம் சூத்திரவுரை) எனவும் உதாரணங்கள் காட்டியமையும் கம்பர்க்குள்ள பழைமையைக் குறிப்பிக்கின்றன. கி. பி. ௧௧-ம் நூற்றாண்டே கம்பர்க்குரிய காலமாயின் அக்காலத்துச் சிறப்புற்று விளங்கிய பெரிய புராணம், கலிங்கத்துப்பரணி முதலியவற்றைப் புறத்திரட்டுடையார் எடுத்தாளாராதலின், அக்காலத்துப் புலவரினும் கம்பரும் புறத்திரட்

டாரும் முற்பட்டவரென்பது தேற்றமாம். இவற்றால் நாத முனிகள் கம்பரிருந்தது, கூ-கO ம் நூற்றாண்டுகளின் இடைக் காலமென்பது தெள்ளிது."

இவ்விரண்டு உரைகளும் ஒரு பிரபல ஆசிரியரால், செந் தமிழ்-தொகுதி இரண்டில், சுஅ, சுகூ-ம் பக்கங்களில் வரையப் பெற்றிருக்கின்றன. இவ்விரண்டு உரைகளைப்பற்றியும் ஆராய வேண்டியது அவசியமாக இருக்கின்றது.

## சரித்திரக் குறிப்பாராய்ச்சி.

மேலே கிடைத்துள, கம்பரது சரித்திரக் குறிப்புப் பிரமா ணங்களை நன்கு ஆராய்ந்து தேறினால், கம்பரது ஜீவியசரிதத்தை யொருவாறு நிர்ணயிக்கலாமென்று தோன்றுகின்றது. மேலே கிடைத்துள ஆதாரங்கள் தக்கப் பிரமாணங்களுடன், பல பெரி யோர்களால் ஒப்புக்கொள்ளப்பெற்ற நிகழ்ச்சிகளாகவே இருக் கின்றபடியால். இவைகளைத் தொடர்ந்து தொகுத்து அம்மஹா னது ஜீவிய சரித்திர நிகழ்ச்சிகளாகக் குறிக்கலாமே யொழிய, பொருந்தாத பல புனைகதைகளைச் சிறிதும் ஆதாரமின்றித் தொகுத்து ஒரு மஹானது மகிமையைக் கெடுப்பது அறிவுடை யோர்க்கு அழகாகமாட்டாது. நம் பெருமானைப்பற்றி யின்று சொல்லப்பெறும் " கம்பர் நாவிதர் வேடம் பூண்டார் " என்பது போன்ற பல புனைகதைகட்குத் தக்க ஆதாரங்கள் பிரமாணங்க ளுடன் காணப்படுகின்றனவோ? இல்லையே யன்றோ? ஒரு மனிதர் வாழ்க்கையில் ஒரு புலவர் வாழ்க்கையில்-ஒரு பெரியார் வாழ்க்கையில் இத்தகைய இடைநிகழ்ச்சிகள் நிகழக்கூடியனதாம் என்று நாம் ஒப்புக்கொள்ளலாமாயினும், ஆதாரங்காட்டாமல் - ஆதாரங் கிடைக்காமல் ஒரு புனை கதையைக் காட்டுதலென் பதும் - ஒரு புனை கதையை ஒப்புக்கொள்ளுதலென்பதும் உண் மைக்கு உடன்பாடாகுமோ? ஆகலின், இதுவரையில் நமக்குக் கிடைத்துள்ள மேற்சொன்ன ஆதாரங்களுள் சரித்திர நிகழ்ச் சிக்குத் தொடர்ந்து சம்பந்தப் பட்டவற்றைக் கொள்ளுதலும்

சம்பந்தப்படாதவற்றைத் தள்ளுதலும் செய்து, நம் கவிச் சக்கரவர்த்தியாரது ஜீவிய சரிதத்தை யொழுங்கு படுத்த முயல்வோமாக.

கம்பா சரித்திரத்துக்கு ஆதாரமாக நாம எடுத்துக் காட்டியுள்ள மேற்குறித்திருக்கும் உஎ-செய்யுள்களும், சில வழக்குரைகள் என்பதிற் காட்டியுள்ள சில நிகழ்ச்சிகளும் ஆகிய இவையே நாம் எடுத்து இங்கு ஆராய வேண்டியவையாகும். இவற்றுள் ஒருசில சரித்திரநிகழ்ச்சிக் குறிப்புக்கு யாதும் பொருத்தங்காட்டாமலிருக்கின்றன; ஆகலின் அவற்றை நீக்கிப் பிற செய்யுள்களையும் வழக்குரைகளையும் வைத்துக்கொண்டு சரித்திரத்தைத் தொடர்ந்து காட்டுவோமாக

பிற ஆதாரம் என்னுந் தலைப்பின் கீழ்க் காட்டப்பெற்ற "கம்பர் பிறந்தவூர்" என்று ஆரம்பித்த செய்யுளானது வேறொருவராகிய திருவழுந்தூர்த் தாதியால் கூறப்பட்ட தொன்றாயிருப்பினும், நம் கவிப்பெருமானுரது "பிறப்பிடம் திருவழுந்தூர்" தானென்பதைக் குறித்து நிற்கின்றது.

முதற் செய்யுளாகிய "மோட்டெருமை வாவிபுக" என்று ஆரம்பிக்கும் இது, நம் கவிப்பெருமான் தம்மை யாதரித்த பிரபுவாகிய சடையப்ப வள்ளலாருடன் பழக ஆரம்பித்தபோது, "கவி சக்கரவர்த்தியால் பாடப் பெற்றது" என்னும் குறிப்பால், அந் நிகழ்ச்சியைக் குறிப்பதொரு அடையாளமாக எடுத்துக்கொள்ளக்கூடியதொன்று. இங்ஙனமாய இந்த நிகழ்ச்சியைப் (சடையப்பவள்ளலாற் போற்றி யெடுத்து வளர்க்கப் பெற்றனர் என்பதை) பிற சோழமண்டல சதகச் செய்யுள்களும் பாண்டிமண்டல கொங்குமண்டல சதகச் செய்யுள்களும் குறித்துக்கொண்டிருக்கின்றனவென்பதை யாங்காங்குக் காட்டியுள்ளோம்.

மூன்றுவதாகிய "மெய்கழுவி வந்து" என்று ஆரம்பிக்கும் இச்செய்யுள், சடையப்ப வள்ளலாரது விருந்திடு சிறப்பைக்

குறித்துக் கொண்டிருப்பதாயினும், "கம்பர் படித்துத் தேறிச் செய்யுள் செய்யும் ஆற்றலடைந்தனர்" என்னும் குறிப்பையும் காட்டிக்கொண்டு நிற்கின்றது.

நான்காஞ் செய்யுளாகிய "கன்னியழிந்தனள்" என்னுந் தலைப்புடைய இது, காவேரிப் பெருக்கையடக்கிப் பாடப்பெற்று அங்ஙனம் அதில் வெற்றிபெற்ற நிகழ்ச்சியைக் குறித்துக்கொண் டிருப்பதால், "நம் கவிப்பெருமானார் தம் கவிகளில் தெய்வத் தன்மை விளங்கியிருக்கும் பாக்கியத்தையும் பெற்றார்" என்னுங் குறிப்பையுங் காட்டி நிற்றல் உணர்ந்துகொள்ளலாம்.

இரண்டு என்னும் எண்ணிக்கையின் கீழ்க்குறிக்கப்பெற்றி ருக்கும், "மங்கை பொருபாகன்" "ஆழியான் பள்ளி" "பாரைச் சுமந்த" என்று ஆரம்பிக்கும் மூன்று செய்யுள்க ளூம், "கவிப்பெருமான் ஏரெழுபது என்னும் நூலொன்றைப் பாடியுள்ளார்" என்னும் நிகழ்ச்சியையும், அது அரங்கேற்றப்படு டும்போது "புதுவைச் சேதிராயன் என்னும் பிரபுவை விடந் தீண்ட, அதனைக் கம்பர் தீர்த்து, இறக்கிச் சுகமாக்கினர்" என் னும் நிகழ்ச்சியையும் குறித்துக்கொண்டு நிற்கின்றன; இவை யும் கம்பநாட்டாழ்வார் கவிகளில் தெய்வத்தன்மையுள்ளதென் னும் குறிப்பை யுணர்த்திநிற்றல் தெளியலாம். இந்நிகழ்ச்சியைப் பிற தொண்டைமண்டலசதகம் திருக்கைவழக்கம் முதலியவைக ளூம் ஒப்புக்கொண்டிருக்கின்றன.

ஆறாவது செய்யுள்ளாகிய "கூளம் பிடித்தெள்ளின்" என் னும் முதலொடு காட்டப்பெற்றிருக்கும் இது, "கம்பர்க்கும் ஒரு வாணியத்தாதப் புலவர்க்கும் சோழன் அவையில் பெரு வாதம் நிகழ்ந்த" தெனக்குறித்து நிற்கின்றது. இச்செய்யு ளால், "நம் கவிப்பெருமானார்க்கு அரசவைப் பிரவேச" முண்டெ ன்றநிகழ்ச்சியையும் "கம்பர் காலத்துப் புலவர் வாணியத்தாத ரென்பார்" என்பதையும் காட்டி நிற்றல் அறிகின்றோம்; அன் றியும், இவ்வவையில் புனைகதைகளிற் கூறப்பெறும் ஒட்டக்கூத்

தர் முதலிய பெரும் புலவர்கள் இல்லாமையையும் உணர்த்தி நிற்கின்றது.

எட்டாவதாகக் குறிக்கப் பெற்றிருக்கும் "காதமிருபத்து நான்கு" என்னுந் தலைப்பிலாரம்பிக்கப் பெற்ற செய்யுளானது, "சோழமன்னற்கும் கவிச்சக்ரவர்த்திக்கும் பிணக்குண்டானமை" யைக்குறித்து நிற்கின்றது. இதனால் கம்பர் ஸ்வதந்திரவுணர்ச்சியும், செல்வராயினும் நியாயவழி தவறினோர்தமை மதியாத்தன்மையும் உடையாரென்பதும் விளக்குகின்றது; அன்றியும், 'கம்பர் காலத்தில் சோழநாடு இருபத்து நான்கே காவதச் சுற்றளவுள்ளதொரு ஒரு சிறுநாடாகத்தானிருந்திருத்தல்வேண்டு' மென்பதையும், "இதனால் சோழமன்னர் ஆதிக்கம் பெறா அரசராக இருந்திருத்தல் வேண்டு" மென்பதையும், "ஆகலின் கம்பர் சோழராதிக்கம் பெற்றிருந்த பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர்தா" மென்பதையும் வற்புறுத்திக்கொண்டிருத்தல் உணர்க. சோழநாடு அக்காலத்து இருபத்துநான்கு காதம்தான் என்பதற்குச் சான்றாக "கடல்கிழக்கு தெற்கு கரைபொரு வெள்ளாறு" என்னும் அடியுடைய கம்பரது தனிப்பாடலொன்றும் விளங்கிக் கொண்டிருத்தல் காண்க. இவ்வுண்மையை "செல்லுங்குணபால்" என்னும் சோழமண்டல சதகச் செய்யுளும் நன்கு வற்புறுத்திக் கொண்டிருத்தல் தெளிக.

இங்ஙனம், கம்பர் சோழமன்னனிடம் பிணங்கிப் பிரிதற்குக் காரணம், கம்பர் 'வாணியத்தாதப் புலவர்க்கு இப்பேரவையில் பெருஞ் சிறப்பளித்தல் கூடாது' என்று மறுத்துச் சொன்ன ஸ்வதந்திர வுணர்ச்சியே தானிருத்தல் வேண்டுமெனவும் ஊஹிக்கலாம்

"செட்டி மக்கள் வாசல் வழி" என்னும் ஐந்தாஞ் செய்யுளானது, "கம்பர் சோழனிடம் பிணங்கிப் புறப்பட்டு மதுரை

மார்க்கம் செல்லும்போது வழியில் உலகியலையறிந்து சொன்ஞர்'' என்பதைக்குறித்து நிற்கின்றது.

ஏழாஞ்செய்யுளாகிய "தாதாவென்ருலும்" என்னுஞ் செய்யுள், "ஆணைதேடிச்சென்ற கம்பரைத், தாதர் என்னும் ஓர் பிரபு ஆதரித்தார்" என்னும் உண்மையைக் காட்டி நிற்கின்றது. ஒரு தாதர் காரணமாகப் பிணங்கிப் புறப்பட்ட நம் கவிக்கு, மற்ருெரு தாதரே யாதரவு காட்டிஞரென்பது வெளிப்படை.

"என னுடைய தம்பி" என்னும் அடியிலாரம்பித்த ஒன்பதாஞ் செய்யுளானது, "பாண்டிநாட்டில் மன்னரவையிற் கம்பர் புகழ்பெற வீற்றிருந்தபோது, கம்பரில்லாப் பேரவை வம்பர் நிறைந்ததொன்ருயிருக்கக் கண்ட சோழமன்னன், சடையப்பவள்ளலாரது திருத்தம்பியாராகிய இணையார மார்பரைக்கொண்டு கம்பரைப் பாண்டிநாட்டிலிருந்தும் அழைத்துவரச் சொன்ஞன்" என்னும் நிகழ்ச்சியைக் குறித்து நிற்கின்றது. அன்றியும், "இக்காலம் பாண்டிமன்னரும் சோழமன்னரும் பரஸ்பரம் செற்றம் விளைவித்துக் கொள்ளாமலிருந்தன" ரென்னும் உண்மையையும் காட்டி நிற்கின்றது. இந்நிகழ்ச்சியை மற்ருெரு "தீரம் பெரிய" என்னும் அடியைக் கொண்ட சோழமண்டல சதகச் செய்யுளொன்றும் குறித்திருத்தல் காண்க. இது தான் கம்பர் சோழனைப் பிரிந்த முதல்தடவை யாகும் என்ப.

பதிஞென்ருஞ் செய்யுளாம் "மன்னவனும் நீயோ" என்னுந் தலைப்புடைய இச்செய்யுள், "கம்பர் இரண்டாம் முறையும் சோழமன்னனைப் பிரியநேர்ந்தது" என்னும் உண்மையைக் குறித்து நிற்கின்றது. இதனுல் இவரது ஸ்வதந்திரமும் ஏனைய அரசவைகளில் இவர்க்குப் பிரவேசமுண்டென்னும் அவரது பெருமிதமும் விளங்குகின்றன.

"உமையவளும் நீயும்" என்னும் பத்தாஞ்செய்யுளும், "வாங்குதிரை கடலேழ்" என்னும் இருபத்தாருஞ் செய்யுளும்

"கம்பர்மதுரைக்குச் சென்றிருந்தபோது, பாண்டியனையும் அவன் மனைவியையும் சிறப்பாகப் பாடினு" ரென்பது விளங்குகின்றது. இவ்வமயம் கம்பர் சிறப்பெய்திப் புகழ்பெற்றிருந்தனர் என்பது தோற்றம். சோழ மன்னனிடம் மிகு நட்புக்கொண்டு சிறப்பெய்தியிருக்கும் போதே, நம்கவிப்பெருமான், ஸ்வாமி தரிசனத்தின் பொருட்டு ஸ்தலயாத்திரைகள் சென்றுரென்பது வெளியாகின்றது; அவ்வண்ணமே மதுரைக்குஞ் சென்றனர் என்பதை இச்செய்யுள் குறித்து நிற்கின்றது.

இங்ஙனம், யாத்திரையாகச் செல்லுமவர், வடக்கிற் பிரதேசங்கட்கும் செல்லும்போது, "கூவம் தியாக சமுத்திரம்" என்னும் ஊர் இடைப்பட, 'இது தம்மையிகழ்ந்து பாடிய வாணியத்தாதற்குச் சோழமன்னனுல்பரிசாக அளிக்கப்பட்ட ஊ"ரென்றெண்ணி, அதனுட் புகாது விலகிச்சென்றனரென்றும், அவ்வூர் வாசிகள் கம்பரது சிவிகையைத் தாங்கி யவரை யுடன்படுத்தி யவரிடம் பாடல் பெற்றன ரென்றும் நமது இவ்வாராய்ச்சிப் பிரிவில், "கம்பர் காலத்துப் புலவர்" என்னும் தலைப்பின் கீழ்க்காட்டியுள்ள வியாஸத்திற் குறித்திருக்கும் நிகழ்ச்சிக்கிது சான்றுகலாம். இந்தக்காலத்தில் சோழமன்னராக இருந்தவருக்குச் சயதுங்கன் என்னும் பெயருடைமை "கம்பரும் வாணியத்தாதரும் பாடியசெய்யுட்" களால் அறியக்கிடக்கின்றது; இவ்வுண்மையையும் "கம்பர் காலத்துப் புலவர்' என்னும் தலைப்பு வியாஸத்தில் அறியலாம்.

பதின்மூன்று பதினுன்காகக் குறித்திருக்கும் "இல்லென்பார்" "நடக்கில் அன்னமாம்" என்னும் தலைப்புடைய இரண்டு செய்யுட்களும் "கம்பர் வல்லியென்னும் ஒரு பொது மகளைப் பொருந்தினர்" என்னும் நிகழ்ச்சியைக் குறித்து நிற்கின்றன.

பதினைந்தாஞ் செய்யுளாகிய "புக்கு விடை தழுவி" என்னுஞ் செய்யுள் "கம்பர் குடித்தனப் பாங்குக்கு வேண்டிய கறவைகள் பெற்று வந்த நிகழ்ச்சி"க்கு ஆதாரமாகக் காட்டப்பெற்

றிருக்கின்றது. இந்நிகழ்ச்சியைத் தொண்டைமண்டலசதகச்செய் யுளும் காட்டி நிற்கின்றது. இதிற் குறித்துள்ள "காளிம்பன்" என்னும் இடையர்குலத்துப் பிரபுவைப்பற்றி அச்சதகம் விதந்து ஓதுகின்றது; ஆகலின், இக்காலத்துப் புலவர் சக்கரவர்த்தி யாகிய நம் கம்பர்க்கும் இப்பிரபு உதவியிருத்தல் கூடும் என்ப தும் ஆம்.

பதினேழு பத்தொன்பது செய்யுட்கள், கம்பரது காம விழைச்சின் விழைவதிகாரத்தையே குறித்து நிற்கின்றன. இத ஞற், கற்றவரும் காமத்தைக் கடந்து செல்லமுடியாதவராரென் பது தேற்றமாகின்றது. இவற்றுலும், கம்பரது விவாஹ நிகழ்ச் சியைக் குறிக்கும் ஆதாரங்களொன்றும் தக்க வழி அகப்படா மையாலும், "கம்பர் மணமின்றியே இருந்தனராம்" என்னும் பெரியோர் கருதுகின்றனர். அம்பிகாபதி காவேரி யென்பாரைக் கம்பரது மகனுகவும் மகளாகவும் குறிக்கும் விஷயம் வல்லியின் மக்கடாமோ "அவர்"? என்றும் ஊஹிக்க இடந் தருகின்றது.

இருபத்தேழாஞ் செய்யுளாகிய "பொது மாதர் வீட்டை" என்னும் செய்யுளும், அதன் மேற்கோளாகக் காட்டப்பெற்ற "தனதானியத்தில்" என்னும் சோழமண்டல சதகச் செய்யு ளும், தர்மதாதாவாகிய சடையப்ப வள்ளலாரும் கம்பர் வல்லியை விழைந்திருந்த தன்மையை யொப்புக்கொண்டு உதவியிருக்கின் ருர் என்னும் உண்மையைக் காட்டி நிற்கின்றன; ஆகலின், "கம்பர் ஒத்தவகையிற் பெண் தேடி மணம் செய்து வாழ்க்கை நடத்தினர் அலர்" என்னும் எமது ஐயப்பாடு உறுதியடை கின்றது.

"நெற்பயிர் விளை கழனி" என்னும் தலைப்புடைய இரு பதாஞ் செய்யுளும், அதன் மேற்கோளாகிய "நிச்சமுறவே" என்னும் தலைப்புடைய சோழமண்டல சதகச்செய்யுளும் "இந் நிகழ்ச்சியையே" காட்டி நிற்கின்றன.

இவற்றை யெல்லாம் நாம் ஆதாரமாகவே கொண்டு பேசி வருதலால், "அண்ணல் திருவாலி" என்னும் தலைப்புடைய பதினாறுஞ் செய்யுளும் தள்ளக்கூடிய தொன்றாகக் கூடவில்லை யன்றோ?

பதினெட்டாஞ் செய்யுளாகிய, "ஒற்றியூர் காக்க வுறை கின்ற" என்னுஞ் செய்யுள் "கம்பர் இராமாயணம் பாடிய நிகழ்ச் சியைக்" குறித்து நிற்கின்றது. கம்பராமாயணப் பாயிரத்துட் காணும், "நடையினின்றுயர்" என்னும் செய்யுளிற் கண்ட உண்மையுடன் இதனைப் பொருத்திப் பார்க்கும்போது, "கம்பர் தமது இராமாயண பாரகாவியத்தை வெண்ணெய் நல்லூரிலும் ஒற்றியூரிலும் பாடியிருத்தல் வேண்டு" மென்னும் உண்மையே வற்புறுத்தப் பெறுகின்றது. இவ்விரண்டு நிகழ்ச்சிகளில் ஒன்று சோழனுடன் கூடியிருந்தபோதும் மற்றொன்று சோழ னின் நின்று பிரிந்திருந்தபோதும் நிகழ்ந்திருக்கலாமென்பதும் ஊஹிக்கப்படுகின்றன.

பன்னிரண்டாஞ் செய்யுளாகிய "அவனிமுழுது" என்னும் தலைப்புடைச் செய்யுள், "கம்பர் சோழனிற் பிரிந்துசென்ற காலை யக்காலத்துச் சிறப்புற்றிருந்த பெருமன்னராகிய காகதீய வம்சத்தினர்க்குத் தலைவராக இருந்த, "ஓரங்கல்நாட்டு உருத்தி ரன்" என்னும் அரசர் பெருமானாலும் போற்றப்பட்டுச் சிலகால மிருந்தனராம்" என்பதைக் குறித்து நிற்கின்றது. அக்காலை, யக்காகதீய வம்சத்தினர் தமிழ்நாட்டு மூவேந்தரையும் வென்று தமிழ்நாட்டிலும் ஆதிக்கம் பெற்று வந்தனர்" என்பது சரித்திர வுண்மையாகலின், அவ்வம்சத்தினர், தமிழ் தெரிந்துளார் என்ப தும், தமிழை யாதரித்தாரென்பதும், அதுகாரணமாகத் தமிழ்க் கவி சக்ரவர்த்தியாம் நம் கம்பர்க்கு உற்றிடத்துதவினரென்ப தும் புனைகதைகளாகமாட்டாவாம். அன்றியும், இது கம்பரது காலத்தையும் வற்புறுத்திக் கொண்டிருத்தல் அறிகின்றோம்.

இருபத்தொன்றாஞ் செய்யுளாகிய "வெங்கண் சிவந்து" என்னும் தலைப்புடைச் செய்யுள், "கம்பரிடம் உள்ளூரச் செற்றங்கொண்ட சோழ மன்னன், கூட்டில் அடைத்து வைத்திருந்த பெரும் பசிகொண்டதொரு புலியொன்றைக் கம்பரைக் கொல்வான் கருதிக் கம்பர் மேலேவியபோது, அதன் வலியடங்கப்பாடி நரசிங்க மூர்த்தியைத் துதித்தனர்" என்னும் உண்மை நிகழ்ச்சியைக்காட்டி நிற்கின்றது; இதனாற் கம்பர் தெய்வப்புலமை யுடையாரென்பதையும் நரஸிம்ஹ உபாஸகர் என்பதையும் தெரிவித்துக்கொண்டிருத்தல் காண்க. இங்ஙனஞ் சோழமன்னன் செற்றங் காட்டியதற்குக் காரணமாகக், "கம்பர் தம்மை யாதரித்த காகதீய வம்சத்தலைவனாகிய ஆந்த்ர மன்னன் ருத்ரனென்பானைக் கொண்டு சோழ மன்னனை யச்சுறுத்தியதேயாம்" எனப் பெரும் புலவர்களும் குறித்துள்ளார்கள்.

"வில்லம்புஞ் சொல்லம்பும்" என்னும் இருபத்திரண்டாஞ் செய்யுளும் மேற்குறித்துள நிகழ்ச்சியைத் தொடர்ச்சியாகவே குறித்து நிற்கின்றது. இச்செய்யுள், "புலிக்குத் தப்பிய பெரும்புலவராங் கம்பரைப் பின்னுங் கொல்வான் முயன்ற அச் சோழ மன்னன் தனது வில்லில் அம்பைத் தொடுத்துப் புலவர் மேலெய்தனன்" என்னும் நிகழ்ச்சியையும், "அக்கூரிய அம்பானது புலவர்மார்பிற் பட்டுருவியபோது, புலவர் பெருமான் மன்னன் குலமழியச் சபித்தனராம்" என்னும் நிகழ்ச்சியையும் கூறிநிற்கின்றது; இதனுள் புலவர், "என்பாட்டம்பு நின்குலத்தைச் சுட்டெரிக்கும்" என்று சொல்லியுள்ளார் என்பது விளங்குகின்றதாயினும், "தனியே அரங்கொண்டதொரு செய்யுளைப் பாடியுள்ளார்" என்பதற்குத் தக்கதொன்றான ஆதாரச் செய்யுளைக் காண்கின்றிலேமாகலில், இச்செய்யுளிற் குறிக்கப் பெற்றிருக்கும் அந்த என் பாட்டம்பு நின் குலத்தைச் சுட்டெரிக்குமென்றே துணி என்னும் வாக்கியமே அவ்வரங்கொண்டதாம் என்றே துணியவேண்டியிருக்கின்றது. எனவே. இச்செய்யுள் "கம்பர் இந் நிலவுலகை நீத்துச்சென்ற நிகழ்ச்சி" யைக் குறித்

துள்ளமை தெண்க. இதனாற் "சில வழக்குரைகள்" என்னும் தலைப் பின்கீழ் நாம் காட்டியுள்ள முதல் நிகழ்ச்சியாகிய "கம்பர் சிவ கெங்கை ஸமஸ்தானத்தைச் சேர்ந்த நாட்டரசன் கோட்டைப் பதியிற் சமாதி பெற்றனராம்" என்பது மறுக்கப்படுதலையுமறிகின் றேம். இப் பின்னிகழ்ச்சிக்குத்தக்க ஆதாரங் காணப்பெற் றிலோமாகலின், இதனையாங்ஙனம் நம்புதல் கூடுமோ? பின்னர்க் குறிக்கப்பெற்றுள்ள, "ஆன்பாலும் தேனும்" என்னும் இருபத்துமூன்றாஞ்செய்யுள், "நமது கவிச்சக்கரவர்த்தி யாரது உபகாரஸ்மிருதியைச் (செய்ந்நன்றியறிதலைக்) குறித்துக் கொண்டிருக்கின்றது. "உத்தமர்கள் தாதாக்களைச் சாகும் போதும் மறக்கமாட்டார்" என்னுமுண்மை யிதனால் விளங்குதல் காண்க. இச்செய்யுளையும் "மோட்டெருமை வாவிபுக" என்னும் தலைப்புடைய முதற்செய்யுளையும் ஒப்பு நோக்கி யிவ்வுண்மையை யூன்றிக் கவனிக்க இச்செய்யுட்கு மேற்கோளாகக் காட்டப் பெற்றிருக்கும், "ஆன்பால் நறுந்தேன்" என்னுந் தலைப்புடைய சோழமண்டல சதகச் செய்யுளும் இதனை வற்புறுத்திக்கொண் டிருத்தல் காண்க.

இருபத்துநான்காஞ் செய்யுளாகிய "இன்றோ நங்கம்பன் இறந்தநாள்" என்னுந் தலைப்புடைய கவியானது, "கம்பர் இறந் தமை கருதி யவ்வைப் புலவர் பாடியதொரு கையறுநிலை" யாகக் குறிக்கப்பட்டுளது. எனவே, இதனால், "கம்பர் ஜீவிய காலத் திலோ - கம்பர் இறக்குந்தருணத்திலோ கம்பராம் பெருட்புலவர் போன்றொரு புலவரேனும் இருந்திலர்" என்பது விளங்குகின்ற தன்றோ? இருந்திருப்பின், இத்தகையதொரு பெரும்புலவரைக் கையிழந்தமைக்குரிய கையறுநிலை, யிங்ஙனமொரு அற்பச் செய்யுளாகத் தோன்றிருக்கக்காரணமில்லை. அப்புலவர்கள் கம்ப ரொடு மருவினராகவோ மருவலராகவோ இருந்து வாழ்ந்தன ரென்னும் உண்மையையறிதற்கும் தக்க சான்றுகள் காணப் பெற்றிலேம். கம்பர் பெருமானாரோடு பகைமை பாராட்டியிருந் தனர் என்னும் புனைகதையிற் குறிக்கப்பெற்ற கூத்தப்புலவரது

தொடர்பைக் கம்ப ரிறக்குந்தருணத்திலும் பொருந்திக்காட்டிப் புனையாதிருந்தமைக்காக, அப்புனைகதை யாக்கியோர்க்கு யாம் மிகவும் கடப்பாடுடையராயிருக்கின்றோம்; இங்ஙனம் அக் கூத்தப் புலவரே ஒதுக்கப்பட்டிருக்கும்போது, அக்கூத்தருடன் இருந்தவராகக் கதையிற் குறிக்கப்பட்டும் கம்பருடன் இருந்தவராகக் கதையிற் குறிக்கப்படாமலும் தோன்றும் புலவர் பெருமானுராகிய புகழேந்தியாரைப்பற்றிப் பேசவும் வேண்டுமோ?

எனவே, இக்குறித்த குறிப்புகளால், "கம்பரது ஜீவிய சரித்திரம் ஒருவாறு உண்மை நிகழ்ச்சிகளாகவே தொடர்ந்து தொகுக்கப்படலா" மென்னும் உறுதிப்பாட்டுக்கு யாம் வருகின்றோம். இங்ஙனமே, இவற்றை வைத்துக்கொண்டு புலவரது கதைச்சுருக்கத்தைத் தொடர்ந்தெழுதி வெளியிடத் தீர்மானித்துளோமாயினும், இக்குறித்த நிகழ்ச்சிகளை யாதாரமாக வைத்துக்கொண்டே, "கம்பர்காலத் தரசரின்னுரென்பதையுமாராய்ந்து துணிந்து வெளியிடலாமென்றே அடுத்தவொரு அதிகாரத்தையும் ஆரம்பிக்கின்றோம்.

## கம்பர் காலத் தரசர் பெருமக்கள்.

கம்பர் காலத்து அரசர் பெருமக்களாவார் இன்னுரெனத் துணிந்தெழுதல் ஒரு அற்ப காரியமாகமாட்டாது ; தக்க - துணிவுடைய ஆதாரங்களொன்றுமே கிடைக்கப் பெற்றிலேம். நம் கம்பரது இராமவதாரக் கவிகளிலோ, பிற தனிக்கவிகளிலோ (அரசரைப்பற்றிச் சிறப்பித்துப்பாடிய சிறப்புச் செய்யுளேனும்) பொதுவாகச் சொல்லப்பெற்ற ஈரொருபாக்களேயன்றி, வேறு - காணப்பெற்றிலேம் ; பொதுவாகவேனும் கிடைக்கப்பெற்றுள அச் செய்யுட்களோ வெனில், "புவிபுகழ் சென்னிபேரமலன்" என்னுந் தலைப்புடைய கிட்கிந்தாகாண்டச் செய்யுளொன்றும் "வன்னி நாட்டிய பொன் மௌலி" என்னும் யுத்தகாண்டச் செய்யுளொன்றுமாகிய இராமாவதாரச் செய்யுட்களிரண்டும், "கம்பர் காலத்துப் புலவர்" என்னுந்தலைப்புடைய அதிகாரத்திற்

காட்டப்பெற்ற "கூளம்பிடித்தெள்ளின்" என்று ஆரம்பிக்கப் பெற்றிருக்கும் கம்பரது தனிக்கவி யொன்றும் ஆக மூன்று செய்யுட்களுமேயாகும்; இவைகள் மூன்றும் சோழமன்னனைக் குறித்துளவேயாம். ஆனால், கம்பரது சரித்திர நிகழ்ச்சியோ, கம்பர்க்குச் சோழமன்னரவையிலும் பாண்டிமன்னர்சபையிலும் ஆந்த்ரமன்னர்அரங்கிலும் பிரவேசமிருந்ததாகக் காட்டிச் செல்கின்றது.

மேற்குறித்த, சோழமன்னனைக் குறித்துப் பிரமாணமாகக் காட்டிய, அம்மூன்று செய்யுட்களிலும், அரசனைக் குறிக்கும் பதங்களாக, சென்னி அமலன் வீரன் தியாகமாவிநோதன் சயதுங்கன் என்னுஞ் சொற்களே கிடைத்திருக்கின்றன; இவையெல்லாம் சோழமன்னரைக் குறிக்கும் பொதுப் பெயர்களாகவே காணப்படுகின்றன. இவற்றுள், ஒரு குறிப்பிட்ட அரசனை யுணர்த்தும் சிறப்புப் பெயராக, ஒன்றேனுங் காணப்படுமோ வென்பது ஆராய்ச்சியின்பாற் பட்டதேயாகும். அங்ஙனமே யாராயப் புகும்போது, புலவர் பாடிய பல தனிச்செய்யுட்களிலும் பிரபந்தங்களிலும் சோழமன்னரைக் குறிக்கும் பொதுப் பெயர்கள் எவை யென்பதை யாராய்ந்துகொண்டு எஞ்சிய சிறப்புப் பெயரைப் பற்றியும் பேசுவோமாக.

சோழர் பொதுப்பெயராய்ச்சிக்குத்தக்க சான்றாக, ஒரு பெரும் புலவர் பெருமான் ஆராய்ந்து குறித்திருக்கும் அரிய குறிப்பொன்றினை யீண்டுக்காட்டுகின்றோம். அது பின்வரும் :—

செந்தமிழ்த் தொகுதி இரண்டு, பக்கம் ௩௯௪-ல்,

"இப்புலவர்கள் ஆங்காங்குப் பாடிய பாடல்கள் பலவற்றுள் குலோத்துங்கன் என்னும் பெயரே யல்லாமல் விக்கிரம சோழன், அபயன், உத்துங்கன், சயதுங்கன், கண்டன், மானாபரணன், அகளங்கன் என்பன முதலாகச் சோழர் சிறப்புப் பெயருஞ் பொதுப்பெயரும் பலவாகப் பயில்வன.'

இப்பல பெயர்களுட் குலோத்துங்கன் என்பது முதற்கண் ஆதித்தன் மகனாகிய வீரநாராயண சோழனுக்கு வழங்கி அதற்குப்பின்பு நெடுங்காலம் கழித்து அபயன் முதலாகப் பலர்க்கும் வழங்கியதாகலின் அது பொதுப்பெயர் போல்வது. அபயன் என்பது முதற்கண் உபய குலோத்தமனுக்கு வழங்கி அவன் வழித்தோன்றிய விக்கிரமன முதலாகப் பலர்க்கும் வழக்கியதாகலின் அதுவும் பொதுப் பெயர் போல்வது. கண்டன், மாநுடரணன், அகளங்கன் என்பன சோழர் பலர்க்கும் வழங்கும் பொதுப்பெயர்களாம். உத்துங்கன், துங்கன், சயதுங்கன் என்பனவும் குலோத்துங்கனின்னறு எடுத்தாண்ட பெயர்களாய்ப் பலர்க்கும் வழங்குவனவேயாம். இச்சோழர் பாடல்களில் ஆங்காங்குக் கண்டுகொள்க" என்று, அப்பெரியார் தமது "புகழேந்தி யொட்டக்கூத்தர்" என்னும் வியாஸத்தில் கூறிச் செல்கின்றார்கள்.

எனவே, குலோத்துங்கன் அபயன் கண்டன் மானுபரணன் அகளங்கன் உத்துங்கன் துங்கன சயதுங்கன் எனனும் பெயர்களெல்லாம் சோழர்க்குரிய பொதுப் பெயர்களாம் என்பது பெற்றும். இவற்றுள் நம்மாராய்சிக்குப் பொருந்தியது சயதுங்கன் என்னும் பதமொனறுதான். இந்த, சயதுங்கன் என்னும் பதமும் சோழமன்னரைக் குறிக்கும் பொதுப்பெயரென்பது தெளிந்தோம்.

இனி, நமது ஆராய்ச்சியிலெடுத்துக்கொண்ட ஐந்து பெயர்களுள் இவ்வொன்று நீங்கலாக எஞ்சிய சென்னி அமலன் வீரன் தியாகமாவிநோதன் என்னும் பெயர்களேயும் ஆராய்வோம்.

சென்னி :— தமிழ் மூவேந்தருள் தலைமைபற்றி நிற்றமை குறித்துச் சோழர்க் குரிமையாக்கப் பெற்ற பொதுப்பெயராமென்பது புலவர் குறிப்பு. (சென்னி - தலை.)

அமலன் :—- இச்சொல் அகளங்கன என்னும்—சோழர் பொதுப்பெயரொன்றற்குரிய பரியாய நாமமேயாகும் மலம்.

களங்கம் ; மலன் (அதனை யுடையவன்) - களங்கன் (அதனையுடையவன்) ; அமலன் - அகளங்கன் எனவே, இதுவும் பொதுப்பெயராதலறிக.

இனி, நான்காவது பதமாகிய தியாகமாவிநோதன் என்னும் சொல்லை யெடுத்தாராயும்போது, அரசர் கூட்டத்துக்கே யுரிய பொதுமைக்குணத்தைக் காட்டுவதாகத் தோன்றுகின்றதேயன்றி, ஒரு குலத்தையோ - ஒரு அரசரையோ சிறப்பாகக் குறித்திடுவதாக இல்லை ; என்னை :- உயர்குடிப்பிறப்பும் செல்வமும் வாய்க்கப்பெற்றார், ஆதிக்கமும் அதிகாரமும் நல்ல சேர்க்கையும் உடன் பெற்றாராயின், கல்விக்கழகங்கள் பல நிறுவிக் கற்றார்க்குப் பரிசளிப்பதையே விநோதப் போக்காகக் கொண்டொழுகுவரன்றோ? ஆகலின், இப்பதம் ஒருவரைக் குறிக்கும் சிறப்புப் பெயராவதொன்றன்றென்க.

தவிரச், சோழமன்னருள் இந்தகைப் பெயர் புனைந்தாரொருவர் இருந்துளாரென்பதையு முணர்ந்திலோமாகலின், இஃது ஒரு சோழனது வித்யா விநோத - தியாக விநோதப் போக்கையே காட்டியதேயாமெனத் தெளிந்தோம். இதற்கேற்ப, இதே கவியானவர், தமது இராமாவதாரத்திற் குறித்த மற்றோரிடமாகிய - கிட்கிந்தாகாண்டம், பிலநீங்கு படலத்தில், "புவி புகழ் சென்னிபே ரமலன் தோள்புகழ், கவிகள்தம் மனையெனக் கனக ராசியும் ;" என்னும் அடிகளாலும், இதே பொருளை - தியாகமாவிநோதன் என்னும் பொருளையே குறித்துக் காட்டியிருத்தலுணர்க ; இக்கவியிலுள்ள முதலடியிற்காட்டிய "சென்னிபேரமலன்" என்பதைச் "சென்னிபேரபயன்" என்றும், "சென்னியாதித்தன்" என்றும் பாடாந்தரங்களுடையதாகக் காட்டுகின்றார்கள் புலவர் ; இவற்றுள், முதற்பாடத்திற் காணும் அபயன் என்னும் பெயரும் சோழர் பொதுப்பெயராகவே உள்ளது ; இரண்டாம் பாடத்திற் காணும் ஆதித்தன் என்னும் பெயரை யேற்றுக்கொள்வோமாயின், கம்பரது காலத்தை மிக முற்

படுத்திக் காட்டுவதாக முடியுமாகலின், அது பொருந்துமாறு காண்கின்றிலம். எனவே, "சென்னிபேரமலன்" என்னும் பாடமே சிறப்புடையதாமென்க.

இனி, வீரன் என்னும் ஒரு பதமே எஞ்சி நிற்கின்றது; இஃது ஒருகால் ஒரே சோழமன்னற்குச் சிறப்புப் பெயராக ஏற்றுக்கொள்ளத் தகுவ தொன்றாகலாம். ஏனெனில், சோழமன்னர் பொதுப்பெயர்களுள் வீரன்என்னும் பெயர் விரவியிருக்கவில்லை யாகலினென்க. ஆயின், இவ்வீரன் என்னும் சிறப்புப் பெயர், சோழமன்னர் பலருள் யாரைக் குறித்திடுகின்றது என்று ஆராயும்போது, முதலாம் ஆதித்தன் மகனாகிய கி. பி ௯௦௭-ல் முடிசூடிய முதற் பராந்தகச் சோழன், வீரநாராயணன் என்னும் பெயராலழைக்கப்பெற்று வீர என்னும் சிறப்புக்கு உரியனாக இருந்தான் எனவும், கி. பி. ௧௦௬௨-ல் முடிசூடிய வீரராஜேந்திரன் என்பானும் வீர என்னும் சிறப்புக்கு உரியனாக இருந்தான் எனவும், கி. பி. ௧௦௭௮-ல் அரசாண்ட வேங்கிநாட்டதிபதியாகிய வீரசோழன் என்பானும் வீர என்னும் சிறப்புக்கு உரியனாக இருந்தான் எனவும் கொள்ளக் கிடப்பதால், இம்மூவருள் எவர் கம்பர் காலத்திருந்தாரென்பதைத் தக்க ஆராய்ச்சியில் தெளிய வேண்டியவராக இருக்கின்றோம்.

நமக்குக் கிடைத்திருக்கும் ஆதாரங்களைக்கொண்டு, நமது கவிசக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வாரது காலத்தைத் தீர்மானமாக நிர்ணயித்துவிடுவோமாயின், அவர் காலத்திலிருந்த - வீர என்னும் சிறப்புக்குரிய சோழமன்னன் இன்னான் என்பதைத் தெளிந்து கூறிவிடலாம். ஆகலின், கம்பரது காலவரை யறையை யுறுதிப்படுத்தும் சாதனங்கள், "கம்பர் சரித்திரக் குறிப்பு" களிலேனும் "பிற ஆதாரங்க" ளிலேனும் கிடைக்குமா என்பதை முதன் முதல் ஆராய்வோமாக.